

பட விளக்கம் 79 ம் பக்கம் பார்க்க...

# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, ஆடி 5உ ★ ஜூலை, 21உ 1963


| | | |
|---|---|---|
| பிரதமரின் தேவை | | ... 3 |
| என்ன சேதி? | ... | ... 6 |
| முதல் மூவர் | ராஜாஜி-சோமு | ... 11 |
| பத்தினி | ... | ... 13 |
| தேயும் சக்கரம் தேயாத தொழில் | ரா. வீ. | ... 14 |
| அறிவுக்கனலே, அருட்புனலே | ரா. கணபதி | ... 18 |
| காங்கோவில் நம் காவலர்கள் | ... | ... 26 |
| சந்திரனே சாட்சி | கௌசிகன்-வினு | .. 33 |
| ராணி மேரி கல்லூரி | ... | ... 38 |
| ஆட்சிமொழி-கருத்தரங்கு | ... | ... 43 |
| அப்பருக்கு ஓர் ஆலயம் | சோமசுந்தரத் தம்பிரான் | ... 55 |
| பொன் விலங்கு | மணிவண்ணன் | ... 58 |
| பிஞ்சு நெஞ்சம் | கஸ்தூரி பஞ்சு | ... 75 |
| காட்டுக் கொடி | கதிர்சாகர் | ... 82 |
| பத்தினிக்கோட்டம் | ஜெகசிற்பியன் | ... 90 |






## புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை ?




உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

**பனமா**

சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின், உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண் பாட்டுக்கு அடையாளம்.

Panama
20
CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம்-
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.,
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 611 TAM.

Greens' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 51

# பிரதமரின் தேவை

“எதிர்க் கட்சிக்காரர்கள் சொல்வதற்காக நான் பிரதமர் பதவியிலிருந்து விலக மாட்டேன். நான் பதவியைத் துறப்பதால் தேச முன்னேற்றம் பாதிக்கப்படாது என்று நிச்சயம் ஏற்படும் போதுதான் பதவியைத் துறப்பேன்” என்று ஜவாஹர்லால் அவர்கள் பஞ்சாபில் பேசியிருக்கிறார். தாங்கள் பதவியில் இருந்தால்தான் நாடு முன்னேறும் என்ற இதே எண்ணத்தில்தான் ஜெனரல் அயூப் அவர்களும், சுகர்ணோ அவர்களும் தங்களை நிரந்தரமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். பாரதப் பிரதமரும் தம்மையும் அறியாமல் அந்தப் பாணியிலேயே பேசுகிறார்.

சமீபத்தில் நடைபெற்ற தேர்தல் முடிவுகளைப் பார்த்தால், ‘தேசம் நேருஜியையே நம்பியிருக்கிறது’ என்கிற பிரசாரம் மக்களிடம் இப்போது அவ்வளவு செல்லுபடியாகவில்லை என்று தெளிவாகத் தெரிகிறது.

கொள்கைகள் எப்படியேனும் இருக்கட்டும். தம்முடைய கருத்துக்களைக் காரியாம்சத்தில் புகுத்தும் திறமை நேரு அவர்களுக்கு இல்லையென்பது ஒரு பெரும் குறை. நேரு அவர்களுக்கு ஆற்றல் வாய்ந்த ஒரு சகா மிகவும் அவசியம். தில்லியில் நாளொரு மேனியாகப் பெருகி வருகிற மந்திராலய ஜமீந்தாரிகளை மேய்க்கவும், பூதாகாரமாக வளர்ந்துவிட்ட மத்திய சர்க்கார் நிர்வாக யந்திரத்தைச் சீராக நிர்வகிக்கவும் நேருஜிக்குத் தக்க துணைவர் தேவை. நேரு அவர்களின் நியாயமான விருப்பங்களை மந்திரிகளும், அதிகாரிகளும் காரியத்தில் நிறைவேற்ற வேண்டுமானால் சக்தி வாய்ந்த ஒருவரின் கண்காணிப்பு அத்தியாவசியமாகும். நியூயார்க் நகரத்தில் இந்திய ரூபாய் எப்படிப் பயனற்று இருக்குமோ, அப்படித்தான் இப்போது பிரதமரின் விருப்பங்கள் பயன் தராமல் இருக்கின்றன. விருப்பங்களைக் காரியமாக மாற்றுவது இந்திய ரூபாயை டாலராக்குவது போன்ற சிக்கலான விஷயமாகும்.

நியாயமாகவும், நேர்மையாகவும் நேருஜி சொல்கிற பல கருத்துக்கள் தினப் பத்திரிகைகளில் கொட்டை எழுத்துக்களில் வெளியாவதோடு முடிந்து போகின்றன. சமீபத்தில் அவர் கூட்டுறவுச் சங்கங்களிலும் சர்க்கார் தொழில்களிலும் அதிகாரிகள் தலையிடக் கூடாது என்று கூறினார். ஆனால் பேச்சோடு நிறுத்திக் கொள்கிறார். இதைக் காரியத்தில் செய்து காட்ட எந்த நடவடிக்கையும் காணோம். பிரசாரம் வேறு; நிர்வாகம் வேறு. மக்களைத் திருத்துவதற்குப் பிரசாரம் போதுமானதாக இருக்கலாம்; அதிகாரிகளை நல்வழிப்படுத்த மேடைப் பேச்சு போதாது; நிர்வாகத் திறமை வேண்டும்.

நேரு அவர்களுடைய வாழ்க்கையின் பெரும்பாகம் மக்களுக்காக மேடைப் பிரசங்கம் செய்வதிலேயே கழிந்திருக்கிறது. இப்போதும் அந்த அளவிலேயே அவருடைய திறமை நிற்கிறது. தாம் விரும்புகிறதைக் காரியத்தில் செய்து காட்ட அவர் கற்கவில்லை, அவரால் அது இயலாது என்றுகூடச் சொல்லலாம். காரியத்தில் இறங்கிவிட்டால் என்ன குற்றமும் குறையும் ஏற்படுமோ என்று தயங்குவது நேரு அவர்களின் இயல்பு. தைரியத்துடன் காரியத்தில் இறங்கி, தவறு நேர்ந்தாலும் அதைத் திருத்திக் கொள்கிற ஆற்றல் நிர்வாகத் தலைவருக்கு அவசியமாகும். இதற்கு நல்ல விவேகமும், இன்னாரை இன்னா

காரியத்தில் ஏவலாம் என்ற பாகு பாடும் அவசியம்.

> **இதனை இதனால் இவன் முடிக்கும்**
> **என்று ஆய்ந்து**
> **அதனை அவன்கண் விடல்**

என்று திருவள்ளுவர் பொருட்பாலில் பாடியது இதுவே. இதற்கு விருப்பு, வெறுப்பை ஒதுக்கி வைத்து, தகுதியின் பேரிலேயே உடன் இருப்போரை மதிப்பிடும் திறமை அவசியமாகும். இதை எழுதுவது மிகவும் சங்கடமான ஒரு விஷயம். ஏனென்றால் ஜவாஹர்லால் அவர்களின் பலவீனம் இங்குதான் இருக்கிறது. இயல்பாக அவரால் செய்ய முடியாத காரியத்துக்காக நாம் அவரைக் குறை கூறிப் பயனில்லை. வேறு ஒரு தலைவர்தான் அவருடைய குறையைச் சரி செய்ய வேண்டும். நேருஜிக்குத் தேவை ஒரு வல்லபபாய் படேல். ஆனால் படேல் இன்று இல்லை.

நேரு அவர்களுக்கும் தமக்கும் உள்ள கொள்கை வித்தியாசத்தை யெல்லாம் ஒரு பக்கம் வைத்துவிட்டு ராஜாஜி சொல்கிறார்: ''மனம் விட்டுப் பேசுகிற ஒரு பிரதம காரியதரிசியையோ—அல்லது உதவிப் பிரதமரையோ நேரு அவர்கள் நியமித்துக்கொள்ள வேண்டும். பதவியும் பாராட்டும் போய்விடுமோ என்று பயப்படாமல், வெறும் பணியாளாக இராமல் வெளிப்படையாகப் பிரதமருடன் விவாதித்துச் செயலில் இறங்கும் ஆற்றல் படைத்த ஒருவரை நேருஜி தமக்குத் துணையாக அமர்த்திக் கொள்ள வேண்டும்.

''இவ்வாறு செய்யப்பட்டு முடிந்தால் நேருஜி அவர்களின் கொள்கைகள் செயலாகும்போது அவற்றின் தவறுகள் இப்போதைவிடப் பளிச்சென்று வெளியானாலும் ஆகலாம். அதனால் தோஷமில்லை. அதுவே தேசத்துக்கும் - ஏன், பிரதமருக்குமே — நன்மையாக அமையும்.''

## ராஜாஜி சொன்னார்; மலேஷியா செய்கிறது!

**ஹி**ந்தியும் ஆங்கிலத்தோடு இருக்கலாம் என்று ராஜாஜி முந்தி குறிப்பிட்டதைச் சிலர் சுட்டிக்காட்டி, இப்போது அவர் ஆங்கிலம் மட்டுமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று கூறுவதைத் தாக்குகிறார்கள். இவ்விஷயத்தை ராஜாஜி சென்ற வார 'ஸ்வராஜ்யா'வில் நன்றாகத் தெளிவுபடுத்தி எழுதியிருக்கிறார். தாம் இரு மொழிக் கொள்கையை ஆதரித்த காலம் உண்டு என்றும், ஆனால் வெகு சீக்கிரத்திலேயே அது நடைமுறைக்கு ஒவ்வாது என்று கண்டு அதனைக் கைவிட்டதாகவும் அவர் கூறுகிறார். ஆட்சி மொழியில் உள்ள



PK

என்னைத் தூக்கி யெறிந்து விடுமோ?

காங்கிரஸ்

மனம் கசந்த
பாரத நாடு



பரஸ்பரம் பாராட்டுக் கழகம்



உத்தரவு, அறிக்கை ஆகியவற்றை அந்தந்தப் பிரதேச மொழியில் பெயர்க்கிற முறை நீண்ட நாட்களாக நம் நாட்டில் செவ்வனே நடைபெற்று வருகிறது. இதற்கும் 'ஹிந்தி—ஆங்கில' இரட்டை மொழிக்கொள்கைக்கும் தொடர்பில்லை. ஹிந்தி வழங்காத பிரதேசங்களுக்கு ஹிந்தி மொழிபெயர்ப்பு தேவையே யில்லாத விஷயம். மேலும் இருமொழிக் கொள்கையின் மூலம் ஒரே காரியாலயத்தில் சில பிரிவினர் ஹிந்தியிலும், வேறு சிலர் ஆங்கிலத்திலும் அலுவல்களை நடத்துவதால் குழப்பம்தான் மிஞ்சும். ஒவ்வொரு காரியாலயத்திலும் ஹிந்தி ஆதரவாளர், ஆங்கில ஆதரவாளர் என்று இரு கோஷ்டிகள் பிளவுபட்டுப் பூசல் ஏற்படும். சுருங்கச் சொன்னால் மொழிப் பிரச்னை காரணமாக நாட்டு நிர்வாகமே குட்டிச்சுவராகும்.

இரு மொழிக் கொள்கையால் இவ்வளவு தீமைகள் விளையும் என்று கண்ட ராஜாஜி அதனைக் கைவிட்டது மிகவும் நியாயம்தானே? 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்று மூர்க்கத்தனமாகத் தங்கள் கொள்கைகளையே கட்டி அழுகிறவர்களுக்கிடையில், தமது கருத்துக்களை மாற்றிக் கொள்ளும் தீரம் பெற்ற ஒரே தலைவர் ராஜாஜி தான். அவரது துணிவைப் பாராட்ட வேண்டுமே அன்றிப் பழித்துரைப்பது

அறியாமையேயாகும். ராஜாஜி ஒரு சமரசத் திட்டத்தை அளித்திருக்கிறார். ஹிந்தி மக்களுக்காக விட்டுக் கொடுத்து இந்த யோசனையை அவர் உருவாக்கி யிருக்கிறார். ஹிந்திக்கு, 'பாரத மக்களின் பொது மொழி' என்பதாக விசேஷ அந்தஸ்து அளிக்கலாம் என்றும், ஆனால் ஆங்கிலமே இப்போது போல 'ஆட்சிமொழி'யாக இருக்க வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். 'குடியரசுத் தலைவர் என்ற முறையில் ராஷ்டிரபதி எப்படி விசேஷ கௌரவம் பெறுகிறாரோ அதே போல் ஹிந்திக்குக் கௌரவம் அளிக்கலாம். ராஷ்டிரபதி நாட்டுத் தலைவர் என்றாலும், நிர்வாகம் மந்திரி சபையினால்தானே இயக்கப்படுகிறது? இதேபோல் ஹிந்தி பாரத நாட்டுப் பொது மொழியாயினும், ஆங்கிலமே நிர்வாக மொழியாக இருக்க வேண்டும்' என்று அவர் கூறுகிறார்.

ராஜாஜி கூறுவது நடைமுறைக்குப் பொருந்துமா பொருந்தாதா என்பதைப் பற்றி நமக்குச் சிறிதும் சந்தேகம் வைக்க வில்லை மலேஷியா சமஷ்டி. மேற்கண்ட கட்டுரையை ராஜாஜி எழுதிய ஓரிரு தினங்களுக்குள்ளேயே, 'மலேஷியாவில் மலாய் மொழி மக்களின் பொது மொழியாக இருக்கும்; ஆங்கிலம் ஆட்சி மொழியாக இருக்கும்' என்ற திட்டம் வெளியாகியுள்ளது. தில்லி சர்க்கார் கண்களைத் திறந்து கொண்டு பார்த்துப் புத்தி பெற வேண்டிய விஷயம் இது.

# என்ன சேதி?

## குட்டு உடைந்தது!

மந்திரி திரு மொரார்ஜி தேசாய் அவர்கள் தமது தங்கக் கட்டுப்பாட்டுத் திட்டம் வெற்றி முகம் காண ஆரம்பித்து விட்டது என்றும், அதன் விளைவாகக் கட்டுப்பாடு விதிகளை இன்னும் கடுமையாக அமுல் நடத்தப் போவதாகவும் 9–7–63 அன்று ரேடியோவில் அறிவித்தார். எதை வைத்து அவர் தமது தங்கக் கட்டுப்பாடு வெற்றியடைந்து வருகிறது என்று கூறுகிறார் எனக் கேட்பவர்களின் சந்தேகத்தைப் போக்கும் வகையில் அவரே பின்வரும் விளக்கத்தைத் தந்தார்:

"நாட்டில் கள்ளத்தனமாகத் தங்கம் கொண்டு வரப்படுவது பெருவாரியாகக் குறைந்து விட்டது என்பது உலக மார்க்கெட்டுகளில் தங்கத்தின் விலை குறைந்து வருவதிலிருந்து புலப்படுகிறது."

அவர் இப்படிச் சொல்லி இரண்டு நாட்கள்கூட ஆகவில்லை. இலங்கையிலிருந்து பின் வரும் செய்தி வருகிறது:

கொழும்பு – 11உ.

இலங்கையில் தங்கத்தின் விலை ஏறியிருக்கிறது. சென்ற ஏப்ரல் மாதம் 115 ரூபாய்க்கு விலை கூறப்பட்ட தங்கம் ஸவரன் நேற்று 148 ரூபாய் என்று கூறப்பட்டது.

இந்த விலை ஏற்றத்துக்குக் காரணம் தங்கம் போதிய அளவு கிடைக்காததுதான் என்று கூறப்படுகிறது.

இந்தப் பற்றாக்குறை ஏற்பட்டதற்குக் காரணம், இந்தியாவுக்குத் தங்கம் கள்ளத்தனமாகக் கடத்தப்படுவதுதான் என்று வியாபார வட்டாரங்களில் சொல்லப்படுகிறது!

சாதாரணமாகக் கெட்டிக்காரனின் புளுகு எட்டு நாளில் தெரிந்து விடும் என்று சொல்லுவார்கள். ஆனால் நமது நிதிமந்திரியின் சாயம் இரண்டு நாள் கூடத் தாங்குவதில்லை.

## லோகியாவும் கூறுகிறார்

'தனி மரம் தோப்பாகாது' என்று சொல்வார்கள். இந்த உண்மையைத் தேசத்தில் உள்ள எதிர்க் கட்சித் தலைவர்கள் கொஞ்ச நாட்களாகத் தீவிரமாக உணர்ந்து வருகிறார்கள். ஜன சங்கம் இவ்வகையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. ஸ்ரீ அசோக்மேத்தாவும் இக்கருத்தையே வெளியிட்டார். இப்போது டாக்டர் ராம் மனோஹர் லோகியாவும் இதே கருத்தைச் சென்ற வாரம் காசியில் வெளியிட்டிருக்கிறார்.

குறிப்பிட்ட பிரச்னைகள் மீது எதிர்க் கட்சிகள் ஒன்றுபட்டு, காங்கிரஸை எதிர்க்க வேண்டும் என்று கூறுகிறார்.

எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொள்ளக் கூடிய குறைந்த பட்ச திட்டம் ஒன்றினைத் தற்சமயம் வகுத்துக் கொண்டு ஒன்றுபடுவது கஷ்டம் என்று உணர்ந்து டாக்டர் லோகியா கூறியுள்ள யோசனையை வரவேற்க வேண்டும்.

காங்கிரஸ் சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை, சர்க்கார் வர்த்தகத் துறையில் பிரவேசிக்கும் அநீதி, ராஜ்யங்களின் உரிமைகளில் தலையிடும் அநீதி நிர்வாக ஊழல் ஆகிய சில குறிப்பிட்ட விஷயங்களில் இன்று நாட்டில் உள்ள பல எதிர்க்கட்சிகள் ஒன்றுபடக் கூடும். அவ்வகையில் குறிப்பிட்ட பிரச்னைகளின் மீது ஒன்றுபட்டு, காங்கிரஸைப் பதவியிலிருந்து அகற்ற முயல வேண்டும்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு



உங்கள் அபிமானப் பத்திரிகையான 'கல்கி'யின் ஆகஸ்டு 4ந் தேதி இதழ் ஆண்டு மலராக வெளிவருகிறது. கடந்த இருபத்திரண்டு ஆண்டுகளாகத் தமிழ் மக்கள் இப்பத்திரிகையிடம் காட்டி வரும் அன்புக்கும் ஆதரவுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நடக்கப் போகின்ற இருபத்திமூன்றாம் ஆண்டில் 'கல்கி', நேயர்களின் பொழுதுபோக்குக்காக மட்டுமின்றி, அறிவு வளர்ச்சிக்கும் மன வளர்ச்சிக்கும் துணை புரிகிற வகையில், என்றும் போலக் கௌரவமாகச் செயலாற்றி வரும். இந்த நோக்கத்துடன் ஆரம்பிக்கப்படவிருக்கும் பலப் பல புதிய அம்சங்களை நேயர்கள் இப்போது முதலே ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கலாம். ஆத்மீகம், பூகோளம், விஞ்ஞானம், சரித்திரம், சமூகம் போன்ற பல துறைகளையும் அணைத்துக் கொண்டு செல்கின்ற இந்தப் புதிய அம்சங்களில் சிலவற்றைப் பார்க்கலாம்:

'ராஜ ராஜ சோழன்' நாடகத்தை அளித்ததன்மூலம் தமிழ் மக்களின் இதயங்களில் நிலையானதொரு இடம் பெற்றுவிட்ட அரு. ராமநாதன் அவர்கள் எழுதும் ''குண்டு மல்லிகை'' என்னும் புதிய சமூகத் தொடர்கதை ஆண்டு மலரில் ஆரம்பமாகிறது. நாளுக்கு நாள் மாறி வருகின்ற உலகில் வாழ்ந்து வந்தாலும் தொன்மையான பழக்க வழக்கங்களில் அசைக்க முடியாத ஆழ்ந்த பற்றுக் கொண்ட தமக்கைக்கும், நவீனமான முற்போக்கு எண்ணங்களில் ஓர் அளவுக்கு அதிகமாகவே ஊறித் திளைக்கும் தங்கைக்கும் ஏற்படுகிற மனப் போராட்டங்களையும் உள்ளக் குமுறல்களையும் விரிவாகச் சித்திரிக்கும் இந்த நாவல், வாசகர்களிடையே ஒரு பெரிய பரபரப்பை உண்டு பண்ணப் போகிறது என்பதில் சந்தேகமில்லை.

இம்மலரில் சூடாமணி, வி. எஸ். சுப்பையா, ராஜம் கிருஷ்ணன் ஆகியோரது கதைகளைத் தவிர, அகிலன் எழுதும் 'அந்த ஒருநாள்' என்ற நெடுங் கதையும் கோமதி சுவாமிநாதன் எழுதும் 'விஷ வித்து' என்ற குறுநாவலும் வெளியாகின்றன.

நவரத்தினக் குவியல்களுக்கிடையில் கோகினூர் வைரம் போல ஆண்டு மலரில் வெளியாகும் சிறப்பு அம்சங்களுக்கிடையில் ராஜாஜியின் சிறுகதை ஒன்றும் ஜொலிக்கிறது.

'கல்கி'யில் ஹாஸ்யப் பகுதிகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிறோம். ஹாஸ்யக் களஞ்சியம், கல்லூரிக் கதம்பம் போன்ற அம்சங்களைப் படித்த நேயர்கள் அடுத்து வரும் இதழ்களில் நீதிமன்றம், ராணுவம், சினிமா, விவசாயம், வைத்தியம், வியாபாரம் போன்ற பல துறைகளைப் பற்றிய நகைச்சுவை மிக்க உண்மை நிகழ்ச்சிகளையும் கற்பனைத் துணுக்குகளையும் படித்துச் சிரிக்கலாம்.

ஒவ்வொரு 'கல்கி' இதழிலும் விசேஷக் கட்டுரைகள் இடம் பெறுகின்றன. இந்தியாவில் திரைப்படத் தொழில் ஆரம்பித்து ஐம்பதாண்டுகள் ஆகியிருக்கின்றன. திரையுலகின் வியக்கத்தக்க வளர்ச்சி பற்றிய சிறப்புக் கட்டுரை சீக்கிரமே கல்கியில் பிரசுரமாகும்.

இருபத்தொரு வயதே நிரம்பிய குமாரி உஷா காஞ்சனசிருங்கை மலைத்தொடரில் பாலுங் சிகரத்தை அடையும் முயற்சியில் 17,700 அடி உயரம் வரை சென்றிருந்த போது தமக்கு ஏற்பட்ட அநுபவங்களைக் 'கல்கி' நேயர்களுடன் அடுத்த இதழில் பகிர்ந்து கொள்கிறார்.

இன்றைய போப்பாண்டவரைப் பற்றிய விசேஷக் கட்டுரை ஒன்றும் விரைவிலேயே வெளிவர விருக்கிறது.

''வியட்நாம் விநோதங்க''ளைப் பற்றியும் அடுத்த இதழிலேயே நீங்கள் அறியலாம். எல்லைப்புறப் பகுதிகளான கௌமான், காஷ்மீரம், நேபா ஆகியவற்றைப் பற்றி ரசமான பல தகவல்களைச் சேகரித்து நேயர்களுக்கு அளிக்கவிருக்கிறோம்.

''கலை வளர்க்கும் கோயில்கள்'' என்ற சிறப்பு அம்சத்தில் இவ்விதழில் ராணி மேரி கல்லூரி இடம் பெறுகிறது. தமிழகத்திலுள்ள கல்லூரிகள் பலவற்றுக்கும் நேரில் சென்று மாணவர்களுடனும் கல்லூரி முதல்வர்களுடனும் அளவளாவியபின் எழுதப்படுகிற இந்தத் தொடர் அம்சம் மாணவ மாணவிகளுக்கும் பெற்றோர்களுக்கும் நல்விருந்தாக அமையும்.

''நாடாண்ட நங்கையர்'' என்ற புது அம்சமும் விரைவில் ஆரம்பமாக விருக்கிறது. இதில், கிளியோபாட்ரா, முதலாம் எலிஸபெத், ஜான்ஸி ராணி, ராணி மங்கம்மா, காதரின் தி கிரேட், விக்டோரியா, சித்தூர் ராணி பத்மினி, ராணி மேரி, மேரியா தெரிஸா போன்றோரது காதலும் வீரமும் மிக்க வரலாறுகளுடன் கண்ணைக் கவரும் முறையில் வரையப்பட்ட ஓவியங்களும் இடம் பெறும்.

'வழக்கறிஞர் வரிசை' என்னும் தலைப்பில் புகழ்பெற்ற வழக்கறிஞர்களையும் அவர்கள் நடத்திய வழக்குகளையும் பற்றிச் சுவையான கட்டுரைத் தொடர் ஒன்றும் விரைவில் தொடங்க விருக்கிறோம்.

''மாதர் உலகம்'' என்ற பகுதியும் ஆண்டு மலரில் ஆரம்பமாகிறது. ஆனால் ஒன்று. இதனைப் பெண்கள் மட்டும்தான் படிக்க வேண்டுமென்று நாங்கள் கூறினாலும் ஆண்களும் படிக்காமலா விடுவார்கள்? எல்லோரும் படித்து இன்புறும் பணியைத்தானே 'கல்கி' மேற்கொள்ளுகிறது?

வணக்கம்

**ஆசிரியர்**

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!

பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றாடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆன்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

வாய்நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி:
லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!




வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL 1702 § TM

# உங்கள் கேசத்தை அழகுபடுத்த நிரூபணமான பாமாலிவ் வழி



## பாமாலிவ் பெர்ஃபியூம்டு கோகோனட் ஹேர் ஆயில்...




## பாமாலிவ் கோகோனட் ஆயில் ஷாம்பு...




**நவநாகரீக இந்தியப் பெண்டிர் கூந்தல் அழகிற்கு விரும்பியெடுப்பது பாமாலிவ்**




15

திருமாலின் திருவடிகளுக்குத் தமிழ்ப் பாமாலை சூட்டுகிற பேறு தமக்குக் கிடைத்ததே. அது தாம் செய்த தவத்தின் பயன் என்று சொல்லிக் களிப்போடு பாடுகிறார் ஆழ்வார்.

யானே தவம்செய்தேன்
ஏழ்பிறப்பும்; எப்பொழுதும்
யானே தவம்உடையேன்—

பாட்டிலுள்ள 'ஏ'காரம் களிப்பின் குறிப்பு.

ஏழு ஜன்மங்களிலும் தவம் செய்தவன் நான் என்பது இப்போது உறுதியாயிற்று. அந்தத் தவத்தின் பயனால் இடைவிடாத பக்தியைப் பெற்றவனாக நிற்கிறேன்.

எம்பெருமான்!—யானே
இருந்தமிழ்நல் மாலை
இணைஅடிக்கே சொன்னேன்!

[எம்பெருமான் – எம்பெருமானே! இருந்தமிழ் – பெருஞ் சிறப்புடைய தமிழில். நல் மாலை – நல்ல பாமாலையை. இணையடிக்கே – இறைவனுடைய திருவடிக்கு. சொன்னேன் – பாடிச் சூட்டினேன்.]

இறைவனுடைய திருவடிக்குத் தமிழ் மாலை சொன்னேன் நான்.

பெருந்தமிழ னல்லேன்
பெருகு

[பெருகு – மிகவும்.]

பெரிய தமிழ்ப் புலவனாகாத நானுமே இந்தப் பாமாலையைத் தமிழில் சூட்டலாயிற்று. இதுவல்லவோ தவப்பயன்!

முன்னோர்களின் வியாக்கியானங்களில் இந்த அடிக்குப் பொருள் சொல்லும் போது, 'தமிழனல்லேன்' என்பதைத் 'தமிழன் 'நல்லேன்'" எனப் பிரித்து, நானும் சிறந்த தமிழ்ப் புலவன் ஆகி விட்டேன் என்று மகிழ்ந்ததாக உரை கூறியிருக்கிறார்கள்.

இறைவனுடைய திருவடிகளைத் துதித்துத் தமிழில் பாமாலை சொன்னேன், நானே பெருந் தமிழ் மகன், என் தவமே தவம், என்று தம்மையே தாம் கொண்டாடுகிற முகத்தால், எம்பெருமானின் அருளைப் பரவசத்தோடு பாடுகிறார் ஆழ்வார்.

யானே தவம்செய்தேன்
ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவம்உடையேன்
எம்பெருமான்—யானே
இருந்தமிழ்நல் மாலை
இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழ னல்லேன்
பெருகு!

# ஆனந்த ஜோதி

எம். ஜி. ஆரை மனத்தில் வைத்துக் கொண்டே கதை தயாரிக்கப்பட்டிருக்கிறதென நினைக்கிறேன். ஆனந்தின் ஒவ்வொரு செயலும், பேச்சும் அதற்குச் சான்று பகர்கின்றன. கஷ்டப்படாமல் காதலிக்கவும், கஷ்டப்பட நேர்ந்த சந்தர்ப்பங்களிலும் காதலியின் கையோடு கை பிணைந்து கவலையின்றிச் சுற்றி வரும் சாலைகளிலும், மாறு வேடம் புனைந்து மறைந்து கிடக்கும் மர்மங்களை வெளிக் கொணரும் சாகஸங்களிலும், வில்லனிடம் வீர தீரச் செயல்கள் புரிந்து வெற்றி பெறும் நிலையிலும் எப்படி நடிக்க வேண்டும் என்று எம். ஜி. ராமச்சந்திரனுக்குச் சொல்லித் தரவேண்டுமா, என்ன? தூயோரைக் காப்பதிலும், தீயோரைத் தண்டிப்பதிலும் திரை உலகில் இன்று நேற்று அறிமுகமா அவருக்கு? ஜமாய்த்து விட்டார். கதாநாயகன் சாயபு வேஷம் போட்டுக் கொண்டு துப்பு துலக்குவது மிகப் பழைய உத்தி. "மலைக்கள்ளனி"ல் எம். ஜி. ராமச்சந்திரன் ஏற்கனவே சாயபு வேஷத்தில் வந்து சக்கைப் போடு போட்டிருக்கிறார்! கொஞ்ச காலத்துக்குச் சாயபு வேஷத்தை விட்டு வைப்பது நல்லதென நினைக்கிறேன்.

"நெஞ்சில் ஓர் ஆலயம்" மாதிரி கண் கலங்கவோ, "சுமைதாங்கி" மாதிரி கடைசியில் ஏமாற்றம் அடையவோ, சந்தர்ப்பம் இல்லாததால் தேவிகா ஏற்ற பாத்திரம் சாதாரணமாகப் போய் விடுகிறது. ஆயினும், காதலனுடன் கைவிலங்கினால் கட்டுண்டு தவிக்கும் நேரத்தில், இழைந்து நடித்து, குழைந்து பேசி 'சபாஷ்' பெற்றுவிடுகிறார் தேவிகா.

காந்தன்

"நினைக்கத் தெரிந்த மனமே, உனக்கு மறக்கத் தெரியாதா?" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது. "கடவுள் இருக்கிறார்—அது உன் கண்களுக்குத் தெரிகின்றதா?" என்ற பாட்டு கடவுள் தத்துவத்தை அருமையாக விளக்குகிறது. எம்.ஜி. ஆரின் இரண்டு உருவங்களைக் காட்டி அந்தக் காட்சியை நினைவில் இருக்கும்படி அற்புதமாகத் தயாரித்திருக்கிறார்கள். பகுத்தறிவு, பகுத்தறிவு என்று கூறிக் கொண்டு பழைய தத்துவங்களையும், கருத்துக்களையும் அறிந்து கொள்ளாமலே கண்டிக்கும் தற்போதைய அவல நிலைக்குச் சவுக்கடி கொடுக்கிறது இந்தப் பாட்டு.

எம். ஆர். ராதா ஒரு மணி நேரம் சத்தியம் பேச முயன்று எல்லோரையும் சிரிக்க வைக்கிறார்!

படத்தின் தயாரிப்பாளரான பி. எஸ். வீரப்பா வில்லனாக வந்து சண்டைக் காட்சிகளில் வழக்கம்போல் நன்றாய் நடிக்கிறார். கதாநாயகனுக்கும், கதாநாயகிக்கும் ஓயாமல் இடைஞ்சல் செய்து உபத்திரவம் விளைவிக்கும் வெறும் வில்லனாக இராமல், இந்தப் படத்தில் வரும் வில்லன் தும்புவை வேறு பல சமூக விரோதச் செயல்களிலும் ஈடுபட்டவனாகக் காட்டியிருப்பது நன்றாயிருக்கிறது.

ஸ்ரீ கதை, வசனம் நாவலர் சீதாராமன் எழுதியிருக்கிறார் என்றால், இத்தகைய சிறப்பு அம்சங்களுக்குக் கேட்க வேண்டுமா?

சிறுவன் கமலஹாஸனுக்கு நிறையச் சந்தர்ப்பங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன; அவனும் மிக நன்றாக நடிக்கிறான்.

ஒளிப்பதிவு மிகவும் சிறப்பாயிருக்கிறது.

பார்த்துக் களிக்கப் பல காட்சிகளும், கேட்டு மகிழச் சில பாடல்களும், ஆரம்பம் முதல் முடியும் வரையில் அலுப்புத் தட்டாத கதைப் பகுதியும் இருப்பதால் "ஆனந்த ஜோதி" பெயருக்கு ஏற்பப் பளிச்சென்றிருக்கிறது.




"இதென்ன கறி? வாயில் வைக்க வழங்கவில்லை." அந்த வீட்டின் ஒரு போர்ஷனில் குடியிருந்தவரின் கோபக் குரல்.

"இதென்ன கறி? வெண்ணெய்க் கத்திரிக்காய் போல் அல்லவா இருக்கிறது!" அடுத்த போர்ஷனில் இருந்தவரின் பாராட்டுக் குரல்.

இரண்டு குடித்தனக்காரர்களும் வாங்கி வந்திருந்த கத்திரிக்காய் ஒரே கடையிலிருந்து எடுக்கப்பட்ட காய்தான். தேர்ந்த கை வெண்ணெய்க் கத்திரிக்காயாக ஆக்கியிருந்தது கறியை. தேராத கை வாயில் வைக்க வழங்காததாக்கியிருந்தது.

தேர்ந்த கைக்கு நல்ல வெண்ணெய்க் கத்திரிக்காய் கிடைத்து விட்டால், சமையல் இன்னும் பரிமளிக்கும். அநுபவமற்ற கைக்கு அது வெண்ணெய்க் கத்திரிக்காயானாலும், வாயில் வைக்க வழங்காததாகி விடும்.

இதுவே எந்தத் துறையிலும் அநுபவபூர்வமான உண்மை.

நல்ல வெண்ணெய்க் கத்திரிக்காய் தேர்ந்த சமையற்காரரின் கையில் அகப்பட்டால், எப்படிச் சுவை மிக்க பண்டமாகுமோ, அதே போலச் சில கதைகள் சிறந்த டைரக்டர்களின் கைக்குள் கிடைத்தால் பரிமளிக்கும்; பேருக்குப் பெயர் சொல்லும்.

ஸ்ரீ பிமல் ராய் திரைப்பட உலகிலே தமக்கென்று ஒரு தனிப் புகழ் தேடிக் கொண்டவர்; தமக்கென்று ஒரு தனிப் பாணியும் வகுத்துக் கொண்டவர். ஸ்ரீ ஜராசந்தரின் கதை 'பந்தினி' அவரது புகழுக்குப் புகழ் தேடித் தருவதாய் அமைந்துள்ளது.

இப்படத்தில் நடிப்பவர்களும், அவரது புகழுக்கு மேலும் புகழ் தேடித் தருவதுபோல் பாத்திரங்களின் குணமறிந்து தரமறிந்து நடித்துள்ளார்கள்.

கதையின் முக்கிய கதாபாத்திரம் கல்யாணி என்னும் பெண் கைதி. எக்குற்றத்துக்காக அவள் சிறைப்பட்டாள் என்பது யாருக்கும் தெரியாது. அவள் புரியும் பணிகள் அவளை மிகுந்த நல்லொழுக்கமுள்ளவளாகக் காட்டுகின்றன. சிறைச்சாலை டாக்டர் அவளோடு பழகும் வாய்ப்புக் கிட்டவே அவளது நல் இயல்புகள் காரணமாக, அவளிடம் மனத்தைப் பறிகொடுக்கிறார். ஆனால் அவள் மனம் அவரிடம் நாட்டம் கொள்ளவில்லை.

நல்லியல்பு கொண்ட ஜெய்லர், அவளது உண்மை வாழ்வை அறிய முயல்கிறார். அவள் தரும் டயரி நல்லதொரு திரைப்படமாக விரிகிறது. அதில் அவளது முதற் காதல் வெளியாகிறது. அதோடு ஒருவனுக்கு உள்ளத்தைக் கொடுத்த பாரதப் பெண் இன்னொருவனுக்கு இணங்க மாட்டாள் என்னும் உண்மையும் புலனாகிறது.

டைரக்டர் பிமல்ராய் படக் கதையைக் கொண்டு போயிருக்கும் முறை, கடைசி வரை ஸஸ்பென்ஸைக் கையாண்டிருக்கும் உத்தி ஆகியவை அற்புதமாயிருக்கின்றன.

சிறைச்சாலையிலே தூக்குத் தண்டனை பெறப் போகும் சுதந்திர தாகம் கொண்ட வாலிபன், 'அழாதே அம்மா! உனக்கு எத்தனையோ செல்வர்கள்!' என்னும் பொருள் படப் பாடும் 'மத் ரோ மாதா லால் தேரே பஹு-தேரே!' என்னும் பாடல் பார்ப்போர் கண்ணை அழ வைத்து விடுகிறது; சுதந்திர உணர்ச்சியை என்றென்றும் நிலைநிறுத்துவதாகவும் அமைந்துள்ளது.

'மேரே ஸாஜன் ஹைன் உஸ் பார்' என்னும் கடைசிப் பாடல் கருத்துச் செறிந்ததாகவும் முடிவும் கதைக்கு ஒரு முன்னோடியாகவும் அமைந்து மனத்தைச் சிந்திக்க வைக்கிறது.

ஸ்ரீ பிமல்ராய் 'பந்தினி' என்னும் இத் திரைப் படத்தை வெகு சுவையான வெண்ணெய்க் கத்திரிக்காய்க் கறியாக்கி விட்டாரா? இப்படிக் கேட்பவர்களுக்கு ஒரு விஷயத்தை மட்டும் சொல்லாமல் இருக்க முடியாது. அதாவது, 'கதை விலம்ப காலத்தில் வருகிறது. சில இடங்களில் பொறுமையைச் சோதிக்கிறது. உப்பு, புளி, காரம் எல்லாம் சரியாகப் போடப்பட்ட கத்திரிக்காய்க் கறியை அளவுக்கு அதிகமாக அடுப்பில் வைத்திருந்தால் சற்றுத் தீசல் வாசனை வந்து விடுமல்லவா? அது போல் ஆமை வேகத்தில் செல்வதனால் சில இடங்களில் டெம்போ குறைந்து விடுகிறது. ஆயினும் பிமல்ராயின் படமாயிற்றே! குறையைக் காட்டிலும் சிறப்பையே அதிகம் காண முடிகிறது.

'பந்தினி' படத்தில் கதாநாயகி கல்யாணியாக நடிக்கும் நூதனின் படமே இவ்வாரத்துக் 'கல்கி' இதழின் அட்டையை அலங்கரிக்கிறது.





# தேயும் சக்கரம் தேயாத தொழில்

மண் தோன்றிக் கல்லும் தோன்றிய காலம். பூமி குண்டும் குழியுமாக, மேடும் பள்ளமுமாக இருந்தது. முள்ளும் கல்லும் வேறு தோன்றி மென்மையான பாதங்களுக்குப் பெரும் தொந்தரவு கொடுத்தன.

அந்தக் காலத்திலே, ஆட்சி புரிந்து வந்த மன்னருக்கு ஓயாத கவலை, இந்தப் பயங்கரக் கஷ்டத்திலிருந்து எப்படி விடுதலை பெறுவதென்று! தமது குடி மக்களின் நலனைக் கவனிக்க அவரும் அல்லவா வெறும் காலோடு நடக்க வேண்டியிருந்தது! எனவே, இத்துன்பத்திலிருந்து எப்படியாவது விடுபட வேண்டும் என்று அவர் தமது மந்திராலோசனை சபையைக் கூட்டினார். நீண்ட ஆலோசனை—புனராலோசனைக்குப் பிறகு, அரச அவை ஒரு முடிவுக்கு வந்தது. முள்ளும் கல்லும் உள்ள இடங்களை யெல்லாம் தோலால் மூடிவிட வேண்டும் என்பதே அரச அவை அங்கத்தினர்களது ஏகோபித்த முடிவு.

அரசரது உத்தரவு பிறந்தது. ஆனால் அதற்காகக் காரியம் நடந்து விடுமா? முள்ளும் கல்லும் நிறைந்த இடங்களை யெல்லாம் முதலில் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமே, இயன்ற காரியமா? எனவே, பூமி முழுவதையுமே தோலினால் மூடி விட்டால்.....? அத்தனை தோலுக்கு எங்கே போவது? மன்னர் கவலை மீண்டும் பெருகியது.

மன்னர் இப்படிக் கவலையே உருவாக இருந்த காலத்தில்தான் ஒரு நாள் வெளியூர் அறிஞர் ஒருவர் மன்னரை நாடி வந்தார். மன்னரின் வாட்டத்தைக் கேட்டறிந்த அவர் கடகட வெனச் சிரித்தார். ''அரசே! அகிலம் முழுவதையும் தோலினால் மூடுவது சாத்தியமா? என்னைக் கேட்டால், பூமியில் நடக்கும் ஒவ்வொருவரும் தோலினால் தங்கள் தங்கள் கால்களுக்கு உறை போட்டுக் கொண்டு விட்டால், இந்தப் பிரச்னை எளிதில் தீர்ந்து விடும்!'' என்றார்.

மன்னர் மகிழ்ச்சியுற்றார். மண்ணுலகிலே மக்கள் தங்கள் கால்களை முள்ளிலிருந்தும் கல்லிலிருந்தும் காத்துக் கொள்ளப் பாதரட்சை என்னும் பொருள் ஆரம்பமாயிற்று.

கால் உறை தோன்றிய கதையைக் கவியரசர் ரவீந்திர நாத டாகுர் இப்படியாகச் சுவைபடக் கூறுகிறார். அதற்கு மேல் உள்ள கதையை....

காலுக்குச் செருப்புப் போட்டுக் கொண்ட மனிதன், கஷ்டப்படாமல்தான் நடந்தான். ஆனால் வெகுதூரத்துக்கு வெகுதூரம் அவனும் நடக்க முடியவில்லை. காலைக் கடுத்தது. மேடும் பள்ளமும் நிறைந்த பூமி வேறு தொந்தரவு கொடுத்தது. எனவே, தான் நடக்கும் பாதையை நிரவிச் செப்பனிட்டான்; மேடு பள்ளங்களைக் கூடிய வரை குறைக்க முயன்றான். மாட்டைப் பழக்கினான், வண்டியைப் பூட்டினான்; தன் பயணத்துக்குப் பயன்படுத்திக் கொண்டான். கோடைக் காலத்துக்கு அது உதவியது. மாரிக் காலத்தில் மண் சாலை சேறுகக் குழம்பியது. வண்டியும் மாடும் அந்த உளையில் மாட்டிக் கொண்டு அல்லலுற்றன. இக்கஷ்டத்திலிருந்து தப்பப் பாதையை மேலும் பலப்படுத்தினான். கப்பிக் கற்களும் சரளைக் கற்களும் போட்டுக் கிட்டித்த பாதை உருவாகியது. கட்டை வண்டி,

வில் வண்டியாகப் பரிணமித்தது. விரைவை விழைந்த மனிதன் குதிரையைப் பழக்கினான். மனிதனது மூளை வேலை செய்யச் செய்ய வாகன வசதிகளும் வளர்ந்தன. பாதைகளும் தார்ச் சாலை, சிமிண்டுச் சாலை என்று உருப் பெற்றன. கட்டை வண்டி, வில் வண்டி, குதிரை வண்டி யெல்லாம் பழைமையாகிச் சைக்கிள், கார், பஸ், லாரி என்று நவீன ரக விமானங்கள் வரை வாகனங்கள் உருவாகி விட்டன. வாகனங்களுக்கு ஏற்ப, அவற்றின் சக்கரங்களும் வளர்ந்தன.

வாயில்லா ஜீவன்களை இம்சித்து, தான் சுகம் பெறும் வழக்கத்தை மனிதன் குறைத்துக் கொண்டு இயந்திரங்களினால் இயங்கும் வாகனங்களை உபயோகிக்கத் தொடங்கவே, டயர் தொழிலும் வளர்ந்து மாபெரும் தொழிலாகப் பெருகி விட்டது.

கப் புறப்பட்ட கொலம்பஸ்தான் ஐரோப்பாவுக்கு அறிமுகப் படுத்தியவர் ஆவார்.

இம்மரம் அதிகமாகப் பயிரிடப்பட்டு வந்த பிரதேசம் தென் அமெரிக்காவைச் சேர்ந்த பிரேஸில் ஆகும். இது வெளி நாடுகளுக்குப் பரவவிடக்கூடாது என்பதில் கருத்தாயிருந்தனர் பிரேஸில் மக்கள். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம், விக்ஹாம் என்பவரை அனுப்பி இரகசியமாக இதன் விதைகளை எடுத்து வரச் செய்தது. அதன் பின்னரே இந்த ரப்பர் உலகமெங்கும் பரவியது. குறிப்பாகக் கிழக்கு ஆசியாவில்-மலேயாவில் இதனைப் பயிரிடலாயினர்.

இரண்டாவது உலக யுத்தத்தின்பொழுது மலேயாவை ஜப்பான் ஆக்கிரமித்துக் கொண்டதன் காரணமாக இயற்கை ரப்பர் கிடைக்காமற் போகவே, செயற்கை ரப்பர் தயாரிக்கும் முறையை அமெரிக்கா கண்டுபிடித்தது.





ரா.வி.

அமெரிக்கா போன்ற மேநாடுகளில் உச்ச நிலையை அடைந்துள்ள இந்த டயர் தொழில், இன்று நமது இந்தியாவிலும், குறிப்பாகச் சென்னை, கேரளம் போன்ற இடங்களில், அமெரிக்க உதவி கொண்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக என்பார்களே — அப்படிப் பல்கிப் பெருகி வளர்ந்து வருகிறது. சென்னை ரப்பர் ஆலைக்குச் சமீபத்தில் பாரதப் பிரதமர் விஜயம் செய்து, ஆராய்ச்சி நிலையம் ஒன்றுக்கு அடிக்கல் நாட்டியதை நினைவு கூர்ந்தால், இத்தொழில் எத்தனை விரைவாக முன்னேற்றப் பாதையை நோக்கிச் செல்கிறது என்பது தெரியவரும்.

டயர் தயாரிப்பதற்கான மூலப் பொருள் ரப்பர் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை. இந்த ரப்பர் ஒரு வகை மரத்தின் பாலாகும். இந்த ரப்பரை முதன் முதலில் கண்டுபிடித்தவர்கள் ஸ்பெயின் தேசத்தவர்கள் என்றாலும், இந்தியாவைக் கண்டுபிடிக்

ஒட்டும் இந்த ரப்பரை ஒட்டாத ரப்பராக்க முயன்றவர்களுள் முக்கியமானவர் சார்லஸ் குட் இயர். எனவேதான் டயர் தொழில் என்றென்றும் இவர் பெயரை நினைவு வைத்துக் கொள்ளும்படி அமைந்துள்ளது.

கந்தகத்தைக் கலந்தால் ரப்பர் ஒட்டிக் கொள்ளும் தன்மையை இழந்து விடும் என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருந்தனர். ஆனால் எந்த அளவில் கலக்க வேண்டும் என்று அவர்களுக்கு விளங்காப் புதிராக இருந்தது. குட் இயர் இது பற்றித் தமது சோதனையைத் தொடர்ந்து நடத்திக் கைநஷ்டப்பட்டுக் கொண்டு வந்தது அவர் சகோதரர்களுக்குப் பிடிக்கவில்லை. ஆத்திரம் மூளவே, அதை விட்டொழிக்குமாறு கடிந்தனர். தம் சகோதரர்களது எதிர்ப்பைச் சமாளிக்க இயலாமல், கந்தகம் கலந்த ரப்பரைக் குட் இயர் எரியும் அடுப்பில் விட்டெறிந்தார். தீயில் போகலை ரப்பரிலிருந்து ஒரு நாற்றம் எழுந்தது.

தமக்கை: என் சீப்பை எடுத்து நாய்க்குக் கொண்டுபோய் வாருகிறாயே, என்ன ஆகும்?

தங்கை: என்ன ஆகிவிடும்? சீப்பை நன்றாகத் துடைத்துச் சுத்தம் செய்த பின்தானே வாருகிறேன்!

---

குட் இயர் ஓடிப் போய் அதனை எடுத்துப் பார்த்தார். ஒட்டும் தன்மையை இழந்து ஒட்டாத தன்மையைப் பெற்றிருந்த ரப்பரைக் கண்டார். கந்தகத்தைக் கலந்து ஓரளவுக்கு உஷ்ணப்படுத்தினால், ரப்பர் ஒட்டும் தன்மையை இழந்து ஒட்டாத் தன்மையைப் பெறுகிறது என்னும் உண்மை அப்பொழுது அவருக்குப் புலனாகியது.

'வல்கனைசிங்' என்று கூறப்படும் இம்முறை அமுலுக்கு வந்தபின் ரப்பருக்கு ஒரு யோகம் பிறந்தது.

'கர்' என்னும் ஓசையை ஒரு மைல் தூரத்துக்கு எழுப்பிக் கொண்டு விரைவாகச் செல்லும் லாரிகள், பஸ்கள், கார்கள் இவற்றின் டயர்கள் உருகாமல், ஒட்டிக் கொள்ளாமல் இருப்பதற்கு இப்பொழுது காரணம் விளங்குகிறதல்லவா?

ரப்பர்த் தோட்டங்களில் பயிராக்கப்படும் மரங்களிலிருந்து எடுக்கும் பாலைப் பார்மிக் அமிலத்தைக் கொண்டு கெட்டியாக்கி ரப்பர் தொழிற்சாலைக்கு அனுப்புகிறார்கள்.

இந்த ரப்பர்த் துண்டுகளை இயந்திரங்களில் கொடுத்து நன்றாக அரைக்கிறார்கள். அரைத்த பின் பல ரசாயனப் பொருள்களைக் கலந்து பதமுள்ளதாக்குகிறார்கள். அதோடு 'காலண்டர்' என்னும் இயந்திரத்தில் கொடுத்து ஒரே அளவுள்ள ஷீட்டுகள் தயாரிக்கிறார்கள்.

ரேயான், நைலான் போன்றவை இந்த ரப்பர் ஷீட்டுகளை இன்னும் உறுதிப்படுத்த உபயோகப்படுகின்றன. தேயும் சக்கரமானாலும் விரைவில் தேயாமல் இருக்க வேண்டாமா? இப்படிப் பல இயந்திரங்களின் வாயில் புகுந்து புறப்படும் ரப்பர் ஷீட், கடல் தாண்டிய அநுமாரைப் போல் மேலும் உரம் பெற்று வெளி வருகிறது. கடைசியில் அடி, இடை, கடை பருத்த மத்தளமெனக் காட்சி அளிக்கிறது. அதைச் சுழலும் சக்கரம் ஒன்றில் கொடுத்து ஓரங்களை மடித்து விடுகிறார்கள். சுழலும் சக்கரத்துக்கிடையே அதை மடித்து விடும் தொழிலாளிகளின் கைச் சுறுக்கை என்னவென்பது?

அடுத்த படியாக அந்தப் பெரும் ரப்பர் மத்தளத்தை ஒரு வட்டப் பெட்டிக்குள் அடைக்கிறார்கள். சில விநாடிகளுக்கெல்லாம் மேலே வருகிறது, நாம் அன்றாடம் காணும் ரப்பர் டயர்களின் உருவத்தில். அடுத்த கட்டத்தில், டியூப்களை நுழைக்கும் பணியையும் தொழிலாளர்களின் உதவியோடு இயந்திரமே செய்து முடிக்கிறது. ரேயான், நைலான் போன்றவற்றை உள்ளடக்கிக் கொண்டு கருத்த, பருத்த சக்கரமாக வந்து நிற்கும் டயரை, அது பட்ட துன்பம் போதாதென்று மேலும் பல சோதனைகளுக்கு இலக்காக்குகிறார்கள். நன்றாக உழைக்கக் கூடியது தானா, குறைபாடு ஏதும் கிடையாதா என்று பார்த்த பின்னரே, விற்பனைச் சந்தைக்கு அனுப்புகிறார்கள்.

இப்படி உறுதி வாய்ந்த டயரைத் தயாரிக்கும் பொறுப்பை எர்ணாகுளத்துக்கு அருகில் உள்ள பிரீமியர் டயர் ஆலையும், சென்னை ரப்பர் தொழிற்சாலையும் ஏற்றுள்ளன. பிரீமியர் தொழிற்சாலைக்கு அமெரிக்காவைச் சேர்ந்த 'ரப்பர் இண்டர் நேஷனல்' ஆலையின் உதவி கிட்டியுள்ளது. இங்கு தயாரிக்கப்படும் டயர்களில் ரேயான் உபயோகப்படுத்தப்படுகிறது. ஏறக் குறைய ஓராண்டாக இயங்கி வரும் இந்த ஸ்தாபனம் நாளொன்றுக்கு ஐந்நூறு டயர்களும், டியூபுகளும் உற்பத்தி செய்து வருகிறது. இன்னும் சில இயந்திர சாதனங்கள் வந்தவுடன் இதைக் காட்டிலும் இருமடங்கு டயர்களை உற்பத்தி செய்யத் தொடங்கி விடும். அதோடு கன்வேயர் பெல்ட், 'வி' பெல்ட் ஆகியவைகளையும் உற்பத்தி செய்யப் போகிறது. இயற்கை ரப்பர், செயற்கை ரப்பர் இரண்டையும் கொண்டு எண்பது சதவிகிதம் டிரக்குகளுக்கான டயர்களையும் மீதியைப் பயணிகளுக்கான வண்டிகளுக்கு உதவும் டயர்களாகவும் இங்கே செய்கிறார்கள்.

சென்னையில் உள்ள ரப்பர் தொழிற்சாலைக்கு அமெரிக்காவைச் சேர்ந்த ஒஹையோ மான்ஸ்பீல்டு டயர் அண்டு ரப்பர் கம்பெனியாரின் ஒத்துழைப்புக் கிட்டியிருக்கிறது.

இத் தொழிற்சாலையில் நாளொன்றுக்கு ஆயிரத்து முந்நூறு டயர்களும் டியூப்களும் சென்ற ஆண்டிலிருந்து உற்பத்தி செய்து வருகிறார்கள். இந்த ஆலை நவீன வசதிகள் பலவும் பெற்று விளங்குவதற்குக் காரணம், கூலே நிதியிலிருந்து இருபத்தைந்து லட்சம் ரூபாய் கடனுதவி கிடைத்திருப்பது மட்டும் அல்ல; மான்ஸ்பீல்டு கம்பெனியாரின் தொழில் நிபுணர்கள் புரிந்து வரும் உதவியும் ஆகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக இவ்விரு நிறுவனங்களின் வளர்ச்சியிலும் அக்கறை காட்டி, இங்கு தொழிலார்வம் மிக்கவர்களாக உள்ளவர்களைத் தன் நாட்டுக்கு அழைத்துச் சென்று அமெரிக்கா பயிற்சி அளித்தும் உதவுகிறது.

விஞ்ஞான ரீதியாக வளர்ந்து வரும் உலகிலே, மனிதன் என்னதான் வானுயரப் பறந்தாலும் பிறந்த மண்ணை மறக்க முடியாது. பிறந்த மண்ணில், தான் சமைத்த சாலைகளையும் வேண்டாமென்று உதறித் தள்ளிவிட முடியாது. நாட்டின் ஒரு பகுதியோடு இன்னொரு பகுதியை இணைக்கும் சாலைகள் மக்களின் நலனைப் பெருக்கும் முயற்சியில் ஈடு பட்டே தீரும். அப்பொழுது அதில் ஊர்ந்து தேயும் டயர்களுக்கும் கணிசமான பங்கு இருந்தே தீரும். சாலைப் போக்குவரத்தும் வாகன வசதிகளும் அதிகமாக இல்லாத காலத்திலேயே உலகத்தை ஒரு குடும்பமாகப் பாவித்து வந்திருக்கிறது பண்டைய பாரதம். விஞ்ஞானத்தின் துணை கொண்டு வளரும் இந்த நாளில் கேட்க வேண்டுமா? எனவே, ஊர்ந்து தேயும் சக்கரமானாலும் இந்த டயர் தொழில் தேயாது; நாடு சிறக்க நற்பணி புரியும் என்று நிச்சயமாக நம்பலாம்.

ராமகிருஷ்ணருடைய இயல்பிலேயே எப்படிப் பெண்மையின் இனிமை இணைந்திருந்தது என்பதை அவரது குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் கண்டு வந்திருக்கிறோம். கதாதரியாக இருந்து பாலன் கதாதரன் கமார்புகூரை என்ன பாடுபடுத்தியிருக்கிறான் என்பதைப் பார்த்திருக்கிறோம்.

அவரது குழந்தைப் பருவத்து ஆசை தாம் அடுத்த பிறவியில் பெண்ணாகப் பிறக்கவேணும் என்பதுதானாம். அப்போது தான் கண்ணனை நன்றாக அன்புசெய்ய முடியும் என்று எண்ணுவான் கதாதரன். அடுத்த ஜன்மத்தில் பெண்ணாகப் பிறந்து, 'கண்ணனைக் கணவனாகப் பெறப் போகிறேன்' என்று நான் சொன்னால் விட்டவர்கள் அதை மனசில் வாங்கிக் கொள்வார்களோ? இப்படியும் கதாதரன் சிந்திப்பானாம். ''அப்படியானால், ஆண்டவா! குழந்தையாயிருக்கும்போதே என்னை வேறு ஒருவனுக்குக் கலியாணம் செய்து தந்து விடட்டும். நான் குழந்தையாக இருக்கும்போதே அவனை உன்னிடம் எடுத்துக் கொண்டுவிடு. நான் விதவையாகிவிடுவேனாம்; உன்னையே எவ்வித இடைஞ்சலுமின்றி நினைத்துக் கொண்டிருப்பேனாம்'' என்று பிரார்த்திப்பான் பாலன். அவனது கற்பனை அழகழகாகப் பாயும். ஏதோ அல்பமாக நிலபுலன்களும் ஒரு மாடும் வைத்துக் கொண்டு கிழவி ஒருத்தியுடன் தான் இளம் கைம்பெண்ணாகக் காலம் கழிப்பது போல் எண்ணிப் பார்ப்பான். பகல் முழுவதும் கண்ணனை எண்ணிப் பாடியவாறே நூல் நூற்பதாகவும் இரவில் யாரும் அறியாமல் கோவா பட்சணத்துடன் — சொந்தத்தில்தான் மாடு இருக்கிறதே! — கோபாலனைக் காணப் போவதாகவும் எண்ணி மகிழ்வான்!

மாதுரியமும், காருண்யமும் பெண்மையின் பிரத்தியேகச் சிறப்புக்கள். இவை பரமஹம்ஸ ராமகிருஷ்ணரிடம் இறுதிவரையில் நிலைத்திருந்தன. 'தாயிற் சிறந்த தயவான தத்துவனாக' ஆண்டவனை வர்ணிப்பதற்கேற்ப ஸ்ரீ ராமகிருஷ்ண முனிவரும் தாயின் குளிர்ச்சியில் ஞானப் பிழம்பைத் தோய்த்து—
அருட் புனலில் அறிவுக் கனலைத் தோய்த்து—
மக்களுக்கு வழங்கினார்.

இப்படிப்பட்டவருக்கு நாயகியாக இருந்து நாதனை வழிபடும் பாங்கு அதி சுலபமாகக் கைகூடியதில்



வியப்பில்லையல்லவா? 'எது பாவித்திடினும் அதுவாகி வந்தருள் செய்'வதால் பரமனைத் தாயாகவும், தந்தையாகவும், குழந்தையாகவும் பதியாகவும் பாவிக்க முடிகிறது. இவ்வாறெல்லாம் வழிபடுவதெனில் அதற்கு அடியவரும் குழந்தையாக, தந்தையாக, காமினியாக இருக்க — அதாவது 'எது பாவித்திடினும் அதுவாக' ஆகும் உயர்வினைப் பெற்றிருக்க வேண்டும். இப்படி அடியார்கள் விளங்கி யிருக்கும் அற்புதத்தை பாரதத்தின் சமய சரித்திரம் முழுவதிலும் காண்கிறோம்.

தாஸ்ய பாவமும், ஸக்ய பாவமும், அபத்ய பாவமும், மதுர பாவமும் அந்தப் பெயர்களில் பரவு முன்பே நம் தமிழகத்தில் அப்பரடிகள் தாஸராகவும், வன்றொண்டர் சகாவாகவும், ஆளுடைப் பிள்ளைகள் அபத்யனாக — புத்திரனாக — வும், மணிவாசகர் நாயகியாக இருந்து மதுர பாவத்திலும் ஐயனை அடைந்ததைக் காண்கிறோம். இவர்களில் ஒவ்வொருவருமே எல்லா பாவங்களிலும் பணிந்த பெருமை பொருந்தி யிருந்தாலும் முக்கியமாக ஒவ்வொரு துறையையே அநுசரித்தனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அனைவற்றையுமே அநுஷ்டித்து மெய்ப்பித்தார்.

இவற்றில் மதுர பாவம் மற்றவற்றினும் சிறப்பானது என்று சைதன்ய மகா பிரபு அருளியிருக்கிறார். அத்வைத சாக்ஷாத்காரத்துக்கு மிகவும் அண்மையில் இருப்பது அது என ராமகிருஷ்ண தேவரும் உணர்த்தி யிருக்கிறார். சைவ சமய குரவர் நால்வரில் திருக்கோவையார் பாடி மதுர பாவத்தில் மூழ்கித் திளைத்த மணிவாசகப் பெருந்தகையின் திருமொழிகளில் அத்வைதாநுபவம் அதிகமாகக் கசிவதையும் இங்கே நினைவு கொள்ளலாம். மகான்களின் வாக்குகள் என்றும் பொய்க்காதவை. ஒரு காலத்தில் ஒரு பகுதியில் வாழ்ந்த மகானின் வாக்கை இன்னொரு காலத்தில் வேறேதோ பகுதியில் வாழ்ந்த இன்னொரு மகான் நிரூபிக்கிறார்!

உலகமே மாயை, நாம் நம்மை எதுவாக எண்ணியிருக்கிறோமோ அதுவே பொய் என்று சொல்லும் அத்வைதத்



துக்கு மதுர பாவம் வழி வகுக்கிறது என்பதை எடுத்த எடுப்பில் ஒப்புக் கொள்ள இயலாது. சாதகன் ஆணாக இருப்பதே பொய்யெனில், தன்னைப் பெண்ணென்று இன்னொரு பொய்யைக் கற்பித்துக்கொள்கிறானே என்றே தோன்றும். உண்மை அப்படி அல்ல. ஆணாகத் தன்னைக் கருதும்போது உலகின் வசப்பட்டிருக்கும் சாதகன், பெண்ணாகத் தன்னைக் கருதும்போது ஈசுவரனுக்கு வசப்பட்டிருக்கிறான். நிலத்தில் பூத்த உப்பாக உலகில் தனித் தன்மையுடன் இருக்கும் ஆண்மகன் நீரில் கரைந்த உப்பாக ஆண்டவனுக்குள் கலக்கும் பெண்ணாகி விடுகிறான். 'ஏகாந்த போகமாய் நீயும் நானுமாய் இறுகும் வகை' என்று அருணகிரிநாதர் பாடியவாறு ஏகாந்தமாக — ஏக அந்தமாக, இறுதியான ஒன்றேயாக — அத்வைத முக்தி அடைகிறான். ஒரு முள்ளை இன்னொரு முள்ளால் கெல்லிவிட்டுப் பிறகு இரண்டு முள்ளையும் தூக்கி எறிவது பற்றி குருமகாராஜ் பலமுறை கூறியதுண்டு. இதே போல் ஆண் என்ற உணர்வைப் பெண் என்ற உணர்வால் கெல்லி எறிந்து, ஆண் பெண் என்ற இரு உணர்வுமற்ற துரியனாகிறான் சாதகன்.

சச்சிதானந்தப் பரம்பொருள் ஒன்றையே புருஷன் என்பது வேத காலத்திலிருந்து நமது வழக்கு. அந்தப் பரம புருஷனே பிருந்தாவனத்தில் கண்ணனாகப் பிறந்து வளர்ந்தான். மற்ற அவதாரங்களை விட அந்த அவதாரத்திலேயே தான் பரமபதநாதன் என்பதை இடையறாமல் நிலைவுறுத்தி, பூர்ணாவதாரம் என்று போற்றப் பெற்றான். அப்படிப் போற்றுதலைப் பெற்றபோதே ஆயனாகவும், தூதனாகவும், சாரதியாகவும் இருந்து எளிமையில் உயர்ந்தான். மாயத்தைத் தீர்க்கும் கீதாமுதத்தைப் போதித்த இவனே மாயம் பலவும் சூழ்ந்து வாழ்ந்தான். மாலாகிய இந்த மாயனை ஆயனாகக் கண்டு மால் கொண்டனர் பிருந்தாவனத்துக் கோபியர். வெறித்துத் திரியும் இந்திரியங்களாகிய பாற்பசுக்களை அடக்கிப் பாலாகச் சொரியச் செய்பவன் அவன். மக்களையும் பசுக்களாக மேய்ப்பவன். பசுபதி அவன். பசு-பதி என்ற சிவநாமமும் கோ-பாலன் என்ற விஷ்ணுநாமமும் ஒன்றேயல்லவா? இந்தப் பசுபதியைத் தங்கள் பதியாக வரித்தவர்கள் ஆய்ச்சியர். அவர்களின் அன்புக்கு ஈடாக எந்த இதிஹாஸ புராணத்திலும் நாம் காண முடியாது. அன்பினால் ஆத்மாவை அடையும் அமர மார்க்கத்துக்கு அவர்களே ஆசாரியர்கள். அவர்களில் பரமாசாரியாராக விளங்கியவள் ராதா தேவி. கண்ணனைத் தவிர வேறெதுவும் தனக்குத் தேவையில்லை என்று உன்னி உருகியவள் ராதிகை. 'அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்; அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை, தன்னை மறந்தாள் தன்னாமம் கெட்டாள்' என்ற ஆழ்வார் மொழிகளுக்கு ஓர் ஆதரிசமாக விளங்கி, கண்ணனோடு இரண்டறக் கலந்தவள் ராதை. வீடு வாசல் உற்றார் உறவினர் எல்லாவற்றையும் நீத்த யோகி ராதை கேவலமான தேக உணர்வுகளை விடாது இருந்திருப்பாளா? இதைத்தான் பலர் எண்ணிப் பார்க்காமல் பகவத் பிரேமையைப் பசுதர்மக் கவர்ச்சியுடன் சாம்யப்படுத்தி விடுகிறார்கள்.

அன்பும் அழகும் கொழிக்கும் கவிதா மார்க்கமாக மதுர பாவத்தை அளித்த கௌரங்கர் ராதையையே சாதகனின் லட்சியமாக வைத்தார். ரூபர், சநாதனர், ஜீவர் முதலிய வைஷ்ணவ ஆசாரியர்களும் வித்யாபதி, சண்டிதாஸ் முதலிய மகா கவிகளும் வங்கத்தில் மதுர பாவத்தைப் பரப்பினர். அவர்களின் நூல்களில் காண்பவற்றையெல்லாம் தமது நுண்ணுணர்வில் துய்க்கத் தொடங்கினார் ராமகிருஷ்ணர்.

கார்மேக வண்ணனையன்றி வேறு நினைவேயின்றி ராதை போல வாழத் தொடங்கினார் ராமகிருஷ்ணர். அவரால் முடியவில்லை. ஆம், ராதை போல வாழ அவரால் முடியத்தான் இல்லை. ராதா தேவியாகவே மாறினார்.

முதலில் ராதையின் திவ்யத் திருஉருவை அவர் தரிசித்தார். 'அவளுடைய சம்பிரமத்தையும், இனிமையையும், தூய்மையையும் நான் எப்படி வர்ணிப்பேன்?' என்று பிற்காலத்தில் இந்தத் தரிசனத்தை நினைத்தபோதெல்லாம் கூறுவார் பரமஹம்ஸர். 'நாக கேஸர மலரின் மகரந்தம் போல் கனக நிறத்தில் ஒளிர்ந்த என் அன்னை ராதைக்கு நிகராகச் சகலத்தையும் ஈசுவரனுக்காகத் துறந்தவர் யாருண்டு?' என்று கேட்பார்.

ராமகிருஷ்ணர் பஞ்சவடியில் தரிசித்த சீதை அவருள்ளேயே எப்படிச் சென்று மறைந்தாளோ அவ்வாறே ராதையும் அவருள் புகுந்து மறைந்தாள். அவளுடைய பாவங்கள் அவ்வளவும் ராமகிருஷ்ணருடையவை ஆயின.

இயற்கையாகவே பெண்மையின் நளினம் மிளிர்ந்த ராமகிருஷ்ணர் பெண்ணாகவே வாழ்ந்தார். பெண்களுக்குரிய தோற்றமும், செய்கைகளும், பெண்களின் தேக இயற்கைகளும்கூட அவரது



''மாமரத்தைப் பத்திரமாப் பாத்துகிட்டு வர்றியா வேலா ?''

''என்னங்க அப்படிக் கேக்கறீங்க? கண்ணும் கருத்துமா கவனிச்சுட்டு வர்றேனுங்க. ஒரு காய்...ஊஹூம் நம்மைத் தாண்டி வெளியே போயிடுங்களா? அதுதான் நடக்காது. வேணுமின்னு மரத்தைப் பாருங்களேன்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உடலில் படிந்து விட்டன. பெண்மை உணர்வுகளும் அவரிடம் பூரித்தன.

இதைப் படிக்கும் வாசகர்களே! சந்தேக மேகங்கள் எழுகின்றனவா? தேவையில்லை. நாம் நம்புகிற விஞ்ஞானத்தின்படியே இதில் விந்தையேதும் இல்லை. ஒரே தாய் தகப்பனின் ஜீவாணுக்கள் கருப்பையில் ஆணாகவோ பெண்ணாகவோ மாறக் கூடுமாயின், வெளியே வந்த பின் அதீதமான உணர்வுகளின் நெரிசலில் ஆண் பெண்ணாவதில் வியப்பதற்கென்ன இருக்கிறது? பௌதிகமானவற்றை யெல்லாம் சோதித்துப் பார்த்துவிட்ட விஞ்ஞானம், 'உலகில் நாம் வேறு வேறு தோற்றத்துடன் காணும் கோடானு கோடிப் பொருள்களும் ஒன்றேதான்—எல்லாம் மின்காந்த அலைகளே' என்கிறது. இந்த விஞ்ஞானத்தினால் எண்ணங்களையும் உணர்வுகளையும் வரையறை செய்ய இயலாது. அப்படிப்பட்ட எண்ணங்களால், உணர்வுகளால் ஒரு தோற்றத்தை ஏன் மற்றொன்றாக்க முடியாது?

ராமகிருஷ்ணர் பெண்ணாக வாழ விரும்புகிறார் என்று அறிந்தவுடன், அந்த உணர்வுக்குப் புறப் பொருட்களால் எவ்வித உரசலும் ஏற்படலாகாது எனக் கருதினார் மதுராநாதர். அகத்தால் மட்டுமின்றி, புறத்தாலும் ராமகிருஷ்ணர் பெண்ணாக வாழவேண்டுமென்பதற்காக அவருக்குக் காசிப் பட்டுச் சேலைகளையும், உத்தரீயங்களையும், மெட்டியிலிருந்து சுட்டி வரையான அணிபணிகளையும் அளித்தார். 'யார் என்ன சொல்வார்களோ, தமது சரித்திரத்தை எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னால் படிக்கப் போகிறவர்கள் என்ன நினைப்பார்களோ?' என்பதைப் பற்றி ராமகிருஷ்ணர் எண்ணியிருப்பாரா என்ன? உலகுக்கு ஓர் அதிசயமாகத் தலையில் சௌரியும், இடையில் சேலையும் தரித்துத் தம்மை அலங்கரித்துக் கொண்டு சௌந்தரிய சிகரமாகத் துலங்கினார் அந்த அற்புத சாதகர்.

முன்பே சொல்லியிருக்கிறோம்—ராமகிருஷ்ணர் சூக்ஷ்மமான உணர்வுகளையும் ஸ்தூலமாகப் பயின்றார் என்று. உயர்வு தாழ்வு உணர்ச்சி இருக்கக் கூடாது என்பதற்காகத் தாமே சமூகத்தில் தாழ்ந்தவர்களின் கழிவிடங்களைச் சுத்தம் செய்திருக்கிறார் அவர். பொன்னும் மண்ணும் ஒன்று என்ற உணர்வைப் பெறுவதற்காக, வாஸ்தவமாகவே ஒரு கையில் நாணயத்தையும் மறு கையில் மணலையும் வைத்துக் கொண்டு, 'இது இரண்டும் ஒன்றே' என்று கைக்குக் கை மாற்றிப் பிறகு பாகீரதிப் பெருக்கில் போட்டிருக்கிறார். இப்போதும் தம் உள்ளத்தில் மதுர பாவத்தை நிரப்பிக் கொண்டதோடு நில்லாமல், உடலைப் பெண்களுக்குரிய விதத்தில் ஸ்தூலமாக அழகு செய்து கொண்டு பெண்மை என்ற தத்துவத்தைக் காத்து வந்தார்.

அவருடைய வாக்கு, நோக்கு எல்லாவற்றிலும் இப்போது பெண்மை ததும்பிற்று. என்ன அதிசயம்! பெண்களைப் போலவே இடது காலை முன் வைத்து நடக்கிறார் ராமகிருஷ்ணர். மீன் வெட்டுக்களைப் போல் சின்னஞ்சிறு கோபமும், லஜ்ஜையும், படபடப்பும் அவரிடம் புரள்கின்றன.

உதயவேளையில் ராமகிருஷ்ணர் மலர் கொய்யும் காட்சியைக் காண நேரிடும் போதெல்லாம் பைரவி பிராம்மணியின் கருத்துக் களிக்கும்; கண்கள் கசியும். 'ஸ்ரீ ராதா ராணி இதோ இந்தத் தக்ஷிணேசுவரத்தில் வந்து ஜீவிக்கிறாளே!' என்று எண்ணிப் புளகமடைவாள்.

நெளிந்து நெளிந்து நளினமாகச் செடிகளிடையே நகர்ந்து, இலை இலையாக நீக்கிவிட்டுக் கொண்டு அவர் மலர் பறிக்கும்போது, அவருடைய அழகிய விரல்களில் அந்த மலர்கள் செடியிலிருந்ததைவிட அதிக சுந்தரமாக இலங்கும். அவரது காந்தள் விரல்கள் அந்த மலர்களை மாலையாக்கி அன்புக் காந்தனாகிய ராதா கோவிந்தனுக்குச் சூட்டி அழகு செய்யும். சில சமயங்களில் அந்த மலர்

கனை மாலையாக்கிப் பவதாரிணிக்கு அளிப்பார் ராமகிருஷ்ணர்.

'காத்யாயனி! நந்தகோபன் செல்வனை நாங்கள் அடைய அருள் புரிவாய்' என்று கோபிகைகள் எப்படி வேண்டிக்கொண்டனரோ, சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய கோதைநாயகி எப்படிப் பாவை நோன்பிருந்து கண்ணனைப் பெறுவதற்காக அம்பிகையை ஆராதித்தாளோ அப்படியே ராமகிருஷ்ணரும் வேண்டிக் கொள்வார். முன்பு அவருக்கு அன்னையாக இருந்த தேவியை இப்போது நாத்தியாக்கி உறவு கொண்டாடினார்!

இதை யெல்லாம் படிக்கும்போது நம்முடைய சமய சமரஸமும் புலப்படுகிறதல்லவா?

ஆறு மாத காலம் தாம் ஆடவர் என்பதை மறந்து ஆண்டவனை ராதிகாவாக இருந்து ஆராதித்தார் ராமகிருஷ்ணர். கண்ணனே எண்ணமாகக் கதறினார்; உள்ளம் குதறினார். அப்போது அவர் உற்ற மகா பாவ அநுபவங்களை நாம் எப்படி அறிய முடியும்? நாச்சியார் திருமொழியையும், மீராபாயின் பாடல்களையும் படித்தால் அந்தப் பேரன்பைப் புரிந்து கொள்ள இயலும். 'அகிலாண்டங்களிலும் உள்ள ஆனந்தம் எந்தச் சேர்க்கையின் முன்பு லவலேசமாகி விடுமோ, பிரபஞ்சத்திலுள்ள அத்தனை பாம்புகளும் தேள்களும் பிடுங்கினாலும் ஏற்படும் நோவு எந்தப் பிரிவின் முன் கடலில் ஒரு துளியாகி விடுமோ அப்படிப்பட்ட சேர்க்கையையும் பிரிவையும் நிவானிப்பது மகா பாவத்தில் ஓர் அங்கமாகிய அதிரூத நிலை' என்கிறது பக்தி ரத்நாவளி. கிரந்தத்திலிருப்பது ராமகிருஷ்ணரின் இதய க்ரந்தியில் உண்மையாக நடைபெற்றது.

இதன் முடிவாக, அல்ல நிறைவாக, திவ்ய தரிசனமும் கிடைத்தது.

'பெண்களில் லலிதை பேரழகி; ஆண்களில் ரகுநாதன் பேரழகன்; லலிதையின் எழிலும், ரகுநாதனின் லாவண்யமும் ஒன்று சேர்ந்தவன் ராதாகாந்தன்' என்று சொல்வார்கள். லலிதையையும், ரகுநாதனையும் ஒருபோல வழிபட்ட ராமகிருஷ்ணருக்கு அந்த ராதாகாந்தன் தன் கோலம் செய் திருமேனியைக் காட்டி அருளினான்.

ராமகிருஷ்ணரின் கதறிய கண்களைத் துடைத்தான்.

ராமகிருஷ்ணரின் குதறிய உள்ளத்தைத் தடவிக் கொடுத்தான்.

அதன் பின் ராமகிருஷ்ணர் கண்டது, எண்ணியது, பேசியது, தீண்டியது எல்லாமே கிருஷ்ண ரஸாயனமாயின.

கங்கையின் எண்ணிறந்த அலைகளும், கங்கைக் கரையின் எண்ணிறந்த மணல்களும், அந்த மணலில் முளைத்திருந்த எண்ணிறந்த புற்களும் எல்லாம் கண்ணனாகவே அவரது கண்களில் நிறைந்தன; கருத்தில் உறைந்தன.

திவ்விய போதையில் கண்ணனுடன் ஆடிப் பாடியும், கூடிப் பிரிந்தும் விளையாடினாள் அபிநவ ராதை.

கால் ஆண்டு இப்படியே தேனூறாக ஓடி மறைந்தது.

மதுர பாவ சாதனையும் முடிந்தது.

நாயிகா பாவத்தில் ராமகிருஷ்ணர் யதுநாதனை வழிபட்டபோது ஒரு நாள் அவருக்கு ஏற்பட்ட ஓர் அரிய அநுபவத்தையும் இங்கு காணலாம்.

கோவிந்தனின் ஆலயத்தில் பாகவத படனம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதனைக் கேட்கக் கேட்க ராமகிருஷ்ணருக்குப் பரவசமுண்டாயிற்று. 'அஞ்சன ஞாயிறு' என்று ராமபிரானைக் கம்பநாடரும், 'சியாமள நிறத்து நிலவு' என்று காமாக்ஷியை மூக கவியும் வருணிப்பது போல், கார்மேக வண்ணத்திலேயே பேரொளி ததும்ப ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ராமகிருஷ்ணரின் முன் நின்றான். அவனது கமலக் கழல்களிலிருந்து ஒளிஇழை ஒன்று எழுந்து வளர்ந்தது. பாகவத நூலைத் தொட்டது. அங்கிருந்து ராமகிருஷ்ணரின் இதயத்தை ஸ்பரிசித்தது. ஒரே பொழுதில் பகவான், பாகவதம், பாகவதர் மூவரையும் இணைத்தது அந்த ஒளியிழை. மூன்றும் ஒன்றே என்ற ஞானத்தை ஸ்தூலமாகப் பெற்றார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணர் பெண்ணாக இருந்து தேவியையும் வழிபட்டதுண்டு. தேவியின் சகியாகத் தம்மைக் கருதி அவர் இந்த வழிபாட்டைச் செய்து வந்தார். தக்ஷிணேசுவரத்துப் பவதாரிணிக்கு மட்டுமின்றி மதுராநாதரின் இல்லத்தில் வதிந்த துர்காதேவிக்கும் சகியாக இருந்து பூஜித்திருக்கிறார் ராமகிருஷ்ணர். ஆடிப் பாடியிருக்கிறார். சாமரம் வீசி மகிழ்ந்திருக்கிறார். அப்படி அன்னையைப் பேரன்புடன் ஆதரிக்கும் அந்தப் பெண் யார் என்று தெரியாமல் மதுராநாதரே மயங்கியிருக்கிறார். அந்த மயக்கத்தை அவரது மனைவி ஜகதாம்பா தாஸி தீர்த்து வைத்திருக்கிறாள்.

இன்னும் இப்படி ஆச்சரியமயமான சம்பவங்கள் பல அந்தக் காலத்தில் நடந்தன.

ராமகிருஷ்ணரைப் பெண்கள் தங்களில் ஒருத்தியாகவே கருதி மனசு விட்டுப் பழக, ராமகிருஷ்ணரும் பெண்ணா

கவே இருந்து அவர்களை ஈசுவரப் பிரேமையில் திருப்பிய அந்த நாட்கள் புனித சிலத்தின் வரலாற்றில் பொன்னான ஏடுகளாகும்.

ஆஞ்சநேய ஸ்வாமியாக இருந்து தாஸ்ய பாவத்தையும், அம்பிகையின் தோழியாகவும் இன்னும் சுதாமா முதலிய கிருஷ்ணரின் தோழர்கள் போலவும் நினைந்து ஸக்ய பாவத்தையும், ராம லாலாவிடம் வாத்ஸல்ய பாவத்தையும், ராதா நாதனிடம் மதுர பாவத்தையும் அநுஷ்டித்தார் ராமகிருஷ்ணர். இந்த எல்லா பாவங்களுமே பக்தி என்பதில் அடங்கும். என்றாலும் இவை எல்லாவற்றுக்கும் மேலாகத் தனியே பக்தி என்றால் அது ஞானத்தைத்தான் குறிக்கும். அந்த ஞான நிலையில் பக்தன் புரியும் சாந்த பாவ சாதனையும் ராமகிருஷ்ணருக்கு இயல்பாகக் கைவந்தது.

பஞ்ச 'பாவங்களுக்கு அதிகமாக அபத்ய பாவம் என்று ஆறுவதாக ஒன்றினைச் சொல்வதுண்டு. சாதகன் பரம்பொருளின் குழந்தையாக இருந்து ஆராதிப்பதே இது. ராமகிருஷ்ணர் எப்படி திவ்விய மாதாவுக்குக் குழந்தையாக இருந்து அவளைத் தம்முள் கொண்டார் என்பதைத்தான் நாம் நிறையப் பார்த்திருக்கிறோமே!

ராமகிருஷ்ணரின் அவதாரப் பணிகளில் மற்றொன்றும் பூர்த்தியாயிற்று!

ஆத்ம நாட்டம் இருந்துவிட்டால் வேறெந்த உதவியுமின்றிக் கடவுளைக் காணலாம் என்பதை முதலில் நிரூபித்தார். பிறகு தந்திர சாஸ்திரங்களின் மூலம் தெய்வ தரிசனம் பெற முடியும் என்பதை நிரூபித்தார். இப்போது பக்தி மார்க்கத்தினால் பரம்பொருளை அடைய முடியும் என்பதையும் நிரூபித்து விட்டார்.

பக்தியினாலேயே முக்தி பெறலாம் என்று பாடுகிறோம்.

பக்தி என்ன — மந்திரம், தந்திரம் எல்லாவற்றாலுமே முக்தி பெறலாம் என்பது ராமகிருஷ்ணர் அவலம்பித்த சத்தியம். பரம்பொருளோடு ஒன்றியிருக்கும் அத்வைத சாக்ஷாத்காரத்தையே ராமகிருஷ்ணர் முக்தியாகக் கருதினார். அத்வைத ஆசாரியராகிய ஆதிசங்கரர் தந்திரம், பூஜை, மந்திரம், கர்மம் எல்லாவற்றையும் இசைத்துத் தந்தது இதனால்தான். குரு மஹராஜ் பல சந்தர்ப்பங்களிலும் அத்வைதத்திலேயே பாரத சாஸ்திரங்கள் யாவும் நிறைவு பெறுகின்றன எனத் தெள்ளத் தெளிவாக நிரூபித்தார்.

நமக்கு ஏதோ ஒன்றிடம் பிரியம் உண்டாகிறது என்றால் அதற்குக் காரணம் அந்தப் புறப் பொருளிடம் நமக்கு இருக்கும் பிரியமல்ல. அப்படி அன்பு செய்வதால் நம் உள்ளத்துக்கு ஓர் ஆனந்தம் உண்டாகிறது என்பதனால்—அதாவது நம்முடைய ஆத்மாவிடம் நமக்குள்ள அன்பு காரணமாகவே—மற்றவற்றை அன்பு செய்கிறோம். ஆத்மா என்றால் என்ன என்றே தெரியாதவர்கள் செய்கிற 'அன்பு' இப்படிப்பட்டது. இதுவே முதிர்ச்சியும், பக்குவமும் பெறும் போது, கீழ்நிலையில் எதை ஆத்ம இன்பம் என்று நினைக்கிறோமோ அது சுயநலம் என்ற துச்சமான உணர்வாகிவிடுகிறது. அதே சமயத்தில் நாம் காண்பன யாவுமே நமது ஆத்மா என்ற உச்சமான உணர்வும் கூடுகிறது. அப்போது செய்கிற உண்மையான அன்பினால் எல்லாமே தானாகின்றன. யாக்ஞவல்கிய மாமுனிவர் தமது ஞான பத்தினி மைத்ரேயியுடன் சம்பாஷிக்கும் உபநிஷத மந்திரங்களைப் படித்தால் இந்தத் தத்துவங்கள் விளங்கும். தன்னை வைத்துத்தான் ஒருவர் பிறவற்றிடம் நேயம் பாராட்டுகிறார் என்று தொடங்கும் ரிஷிபுங்கவர் அந்த 'தான்' என்ன என்பதையும் பிறகு விளக்குகிறார்.

ராமகிருஷ்ணர் தெய்வங்களிடம் செய்த அன்பு இப்படித் தானாகி இருக்கும் அத்வைதத்திலேயே நிறைவு பெற்றது. அன்பு செய்யப்படுபவரும், அன்பு செய்பவரும் அன்பு என்ற ஒன்றாகவே இறுகி விடுவார்கள்!

ஆண்டவனிலிருந்து பிரிந்திருந்து அவன் வேறு, தான் வேறு என்று துவைதமாக வழிபட்டாலும் அவனின் அங்கமாகத் தன்னைக் கருதி விசிஷ்டாத்வைத பரமாக ஆராதித்தாலும் இந்தப் பாவனைகளும் இறுதியில் அத்வைதமாகப் பரம்பொருளில் ஜீவன் ஒன்றுவதற்கே வழி வகுக்கும் என்பது ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அளித்த மகா மந்திரம். (தொடரும்)



''நீ நல்ல பாம்போல்லியோ! ஏன் என்னோட சண்டைக்கு வர்றே?''



# காங்கோவில் நம் காவலர்கள்

இடது: தாய்நாடு திரும்பும் வீரர்களைப் பம்பாய்த் துறைமுகத்தில் வரவேற்றுப் பேசுகிறார் திரு சாவன்.
வலது: 1961ல் காங்கோவுக்குச் சென்ற நம் துருப்பினரைக் கை குலுக்கி விடை கொடுத்து அனுப்பினார் திரு கிருஷ்ண மேனன்.

ஐரோப்பிய நாடாகிய பெல்ஜியத்தின் ஆதிக்கத்தின் கீழிருந்த ஆப்பிரிக்க நாடாகிய காங்கோ 1960 ஜூன் முப்பதாம் தேதியன்று சுதந்திரம் பெற்றது. பதினைந்தே நாட்களுக்குள்ளாகக் காங்கோ குடியரசு அரசாங்கம் ஐ. நா. சபையின் அவசர உதவியை நாடவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது!

விடுதலை அடைந்த ஒரு வாரத்துக்குள்ளாக 28,000 சிப்பாய்களைக் கொண்டிருந்த சுதந்திர காங்கோவின் ராணுவம் புரட்சி செய்தது. அப்போது அந்நாட்டில் வாழும் பெல்ஜிய மக்களுக்குத் தீங்கு நேருமோ என்று பெல்ஜிய அரசாங்கம் அஞ்சியது. அதன்பேரில் தாய்நாடு திரும்பிக்கொண்டிருந்த பெல்ஜியத் துருப்புக்கள் மீண்டும் விமான மார்க்கமாகக் காங்கோ சென்று பரவலாகப் பாராசூட்களில் குதிக்க ஆரம்பித்தன. பெல்ஜியத்தின் இந்த நடவடிக்கையைச் சுதந்திர காங்கோ அரசாங்கம் விரும்பவில்லை. இதற்கிடையில் முன்னேற்றம் அடையாத



காங்கோவில் கமினு விமான நிலயத்தின் அருகே விழிப்புடன் நிற்கும் காவலர்.



காங்கோ செல்லுமுன்னர் பிரிகேடியர் ராஜா தமது குடும்பத்தினரிடம் விடைபெற்றுக் கொள்கிறார்.



ஐ. நா. குழுவினர் கொசுக்களுடனும் பெரியபோராட்டம் நடத்தவேண்டியிருந்தது காங்கோவில்! இங்கு விமானத்தாக்குதலுக்குத் தயாராகின்றனர். பின்னணியில் ஹெலிகாப்டரில் டி. டி. டி. உள்ளது.

டாக் ஹாமர்ஷீல்டுக்காகவும் காங்கோ போராட்டத்தில் உயிர் துறந்த வேறு பலருக்காகவும் நினைவுநாளன்று பிரார்த்தனை நடத்துகிறார் ஒரு பாதிரி.

இந்நாட்டின் பல பாகங்களிலுமிருந்த நாடோடி மக்களின் பல பிரிவினர் தங்களுக்குள்ளேயே ஒருவருடன் ஒருவர் சண்டை போட்டுக் கொண்டனர். சுதந்திரக் குடியரசு அரசாங்கத்திலிருந்து தனியே பிரிந்து விடுவதாகப் பல பிரதேசத்தவர் பயமுறுத்தினர். இத்தகைய குழப்பங்களினால் காங்கோவில் நிர்வாகமே நிலைகுலைந்து விடும் போல் தோன்றியது.

அந்நியரிடமிருந்து உதவி பெற்றாலொழிய நாட்டில் அமைதி நிலவச் செய்ய இயலாதென்ற நிலையில் காங்கோ அரசாங்கம் அமெரிக்காவிடம் உதவி கோரியது. அன்றைய ஜனாதிபதி ஐஸன்ஹோவர் தனி ஒரு நாட்டின் உதவியை நாடுவதைக் காட்டிலும் ஐ. நா. சபையை அணுகுவதே உசிதம் என்று காங்கோத் தலைவர்களுக்கு அறிவுரை வழங்கினார்.

இந்த யோசனையைக் காங்கோ அரசாங்கம் ஏற்றுக் கொண்டது. அதன் பின்னர் தான் ஐக்கிய நாடுகள் சபை பல தேசங்களிலிருந்தும் ராணுவத்தினரைத் திரட்டிக் காங்கோவுக்கு அனுப்பியது.

காங்கோவுக்குப் புறப்படுமுன்னர் டில்லி பாலம் விமான நிலையத்தில் பாரதக் குழுவினர் தங்களுக்குத் தேவையான உபகரணங்களைச் சரிபார்த்துக் கொண்டனர்.

காங்கோவில் மரத்தின் மீதிருந்தபடியே சுற்றுப்புறத்தைக் கண்காணிக்கிறார் ஒரு காவலர்.





அப்படி வந்து சேர்ந்த சிப்பாய்களையும், ஐ. நா. காரியதரிசி டாக் ஹாமர்ஷீல்டை யும் காங்கோ குடியரசு அரசாங்கம் மட்டு மின்றி, அந்தச் சர்க்காருக்குப் பெரிய தலை வேதனையாக விளங்கிய கடங்கா ராஜதானி யின் ஜனாதிபதி ஷோம்பியும் அவரது மந்திரி மார்களும்கூட எலிஸபெத்வில் விமான நிலை யத்தில் வரவேற்றனர்.

காங்கோவில் கலவரங்கள் ஓர் உச்ச கட் டத்தை அடைந்திருந்தபோது ஐ. நா.வின் சார்பில் அங்கே இருந்த துருப்புக்களின் மொத்த எண்ணிக்கை 20,000. இதைத் தவிர நிர்வாக விஷயங்களைக் கவனிக்கும் 'சிவில்' உத்தியோகஸ்தர்கள் 1,300 பேர்கள் இருந்தனர்.

தனித்துப் பிரிந்து விடுவதாகப் பயமுறுத் திய ராஜ்யங்களில் கடாங்காதான் முக்கிய மானது. கடாங்காவின் இந்தப் போக்குக்கு உள்நாட்டுச் சண்டை பூசல்கள் மட்டும் காரணமல்ல; அரசியல் பொருளாதார நோக்கங்களுடன் அந்நியர் பலர் இந்த ராஜ தானியின் விவகாரங்களில் மறைமுகமாகத் தலையிட்டுப் புதிய பிரச்னைகளைக் கிளப்பிக் கொண்டிருந்தனர். கடாங்கா ராஜதானி, வைரங்கள், செம்பு, கோபால்ட், யுரேனியம் ஆகிய விலையுயர்ந்த புதை பொருள்களுக்குப்

**யுத்த தந்திரங்களைச் சிப்பாய்களுடன் விவாதிக்கிறார் கர்னல் மைந்ரே (மூக்குக் கண் ணாடி அணிந்திருப்பவர்)**



ஆனால் சுதந்திரம் பெற்ற பதினோராவது நாள் ஷோம்பி, கடாங்கா காங்கோவிலிருந்து தனியாகப் பிரிந்து விட்டதாகப் பிரகடனம் செய்தார். இதுவரை உலகில் உள்ள எந்த நாடும் கடாங்காவைத் தனியானதொரு தேசமாக ஒப்புக்கொண்டு அறிக்கை விட்ட தில்லை. எனினும் கடாங்கா அதிகாரிகள், ராணுவப் பயிற்சி பெற்ற காங்கோவிகள் அல்லாதவர்களைக்கூட வெளியே யிருந்து வரவழைத்தார்கள். ஏராளமான பொருட் செலவில் அவர்களைத் தங்கள் சிப்பாய்களை நடத்திச் செல்லும் ராணுவ அதிகாரிகளாக நியமித்தார்கள். கவச மோட்டார்களைப் பயன் படுத்தினார்கள். விமானத் தாக்குதல்களை யும் நடத்தினார்கள். கடாங்காவுக்குள்ளே இருக்கிற மக்களில் ஷோம்பிக்கு எதிராகக் குரலெழுப்பத் துணிந்தவர்களை அடக்கி ஒடுக்கினார்கள். ஐ. நா. வைச் சேர்ந்த துருப் பினரையும் தாக்கினார்கள். இவ்வாறு அயல் தேசத்திலிருந்து வந்த கடாங்கா ராணுவ அதி காரிகள் ஐந்நூறு, அறுநூறு பேர்கள் இருக்க லாம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இவர் களில் பெரும்பாலோர் பிரான்ஸிலிருந்தும் பெல்ஜியத்திலிருந்தும் வந்தவர்கள்.

அமைதியை நிலைநாட்டக் காங்கோ அர சாங்கத்துக்கு உதவவும், ஒற்றுமையை வளர்க் கவும், அந்நியரின் தலையீட்டை ஒழிக்கவும், பொருளாதார சமூக முன்னேற்றங்களுக்கு வழி வகுக்கவுமே தாங்கள் அங்கே வந்திருப் பதை ஐ. நா. ராணுவத்தினர் ஒருபோதும் மறப்பதே கிடையாது. கூடுமானவரையில் சமாதானமாகப் போகவும் நேசப்பான்மை யுடன் பிரச்னைகளைத் தீர்க்கவுமே ஐ.நா. துருப்பினர் முயலுவார்கள். மிகவும் அத்தி யாவசியமான சூழ்நிலையில் தற்காப்புக்காக மட்டிலுமே தங்களிடமுள்ள ஆயுதங்களை அவர்கள் பயன்படுத்துவார்கள்.

இந்தப் பொறுமைக்கு எடுத்துக்காட்டாக, நமது தமிழ்நாட்டு ஜவான் பழனி நடந்து கொண்ட விதத்தைச் சொல்லலாம். மெட் ராஸ் ரெஜிமெண்ட், நாலாவது பட்டாளி

பேர்போனது. காங்கோ சுதந்திரம் பெற்ற தருணத்தில் கடாங்கா காங்கோ வின் ஒரு பகுதியாகவே இருந்தது. இதற்கு முன்னால் பெல்ஜியத் தலைநகர் புருஸெல்ஸில் நடைபெற்ற வட்ட மேஜை மகாநாடுகளிலும் கடாங்காத் தலைவர் ஷோம்பி மனமொப்பி ஒற்று மைக்கும் ஐக்கியத்துக்குமே தமது ஆத ரவை அளித்தார். கடாங்காவையும் உள்ளிட்ட சுதந்திர ஐக்கிய காங்கோ வைத்தான் ஐ. நா. சபையும் தமது உறுப்பினர்களில் ஒன்றாக ஏற்றுக் கொண்டது.

**"போய் வருகிறோம்"—சேவை அபாயத்தைப் பற்றிக் கேள்வியுற்றதும் தாய்நாடு திரும்பத் துடித்த சிப்பாய்கள் இதோ கப்பலேறுகி றார்கள். ஐ. நா. சபைக் காரியதரிசி யூதாண்ட் இவர்களுக்கு வாழ்த்துச்செய்தி அனுப்பினார்.**



யலைச் சேர்ந்தவர் பழனி. ஆங்கில எழுத்தான 'ஒய்' வடிவத்தில் அமைந்திருந்த சாலைச் சந்திப்பைக் கண்காணித்து வந்தார் அவர். சுற்றுப்புறத்தில் ஆள் உயரத்துக்கும் மேலே 'யானைப் புல்' செழித்து வளர்ந்திருந்தது. கரையான் புற்றுக்கள் குன்றுகளைப் போல் நின்றன. இந்தப் புற்றுக்களில் ஒன்றின் மேலே காவல் நிலையம் அமைந்திருந்தது. நானூறு கஜத்துக்கு அப்பாலிருந்த ஒரு மஞ்சள் நிறக் கட்டிடத்திலிருந்து கடாங்கா சிப்பாய்கள் ஈட்டி முனைகள் பொருத்தப்பட்ட துப்பாக்கிகளுடன் காவல் நிலையத்தைக் கைப்பற்றும் நோக்கத்தோடு முன்னேறினார்கள். தனக்குத் தெரிந்த ஸ்வாஹிலி மொழியில் ''க்வெண்டா! க்வெண்டா!'' (போய்விடு!) என்று கத்தினார் பழனி. அவர்கள் நிற்கவில்லை. பழனி தமது கையிலிருந்த 'பிரென்கன்'னின் விசையை அழுத்த வேண்டியதுதான். அத்தனை பேரும் இறுதி யாத்திரையைத் தொடங்கி விடுவார்கள். எனினும் பழனி அவ்வாறு செய்யவில்லை. தமது உயிருக்கு நேரக் கூடிய பேரபாயத்தையும் புறக்கணித்தவராய் நிதானமாய்ப் பையிலிருந்து விசிலை எடுத்து பலக்க ஊதினார். விசில் ஓசையைக் கேட்டுப் பழனியின் நண்பர்கள் பலர் ஓடிவந்தார்கள். ஆள் பலம் பெருகியதும் அந்தக் கடாங்கா சிப்பாய்கள் புறமுதுகிட்டு ஓடிவிட்டார்கள். மிகவும் அத்தியாவசியமாயிருந்தாலொழிய உயிர்ச் சேதம் விளைவிக்கக் கூடாது என்ற ஐ. நா. கோட்பாட்டுக்கு உட்பட்டுத் தற்காப்புக்குக்கூடத் துப்பாக்கியை இயக்காமல் தைரியத்தை இழக்காமல் நின்ற பழனியைப் போற்றியதுடன் அந்த முச்சந்தி காவல்நிலையத்துக்குப் ''பழனிக் குன்று'' என்றே பெயர் வைத்துவிட்டனர் மெட்ராஸ் ரெஜிமெண்டைச் சேர்ந்த அவர் தோழர்களும் மேலதிகாரிகளும்!

காங்கோவில் நம் காவலர்களுக்குத் துணையாக இந்திய விமானப் படையைச் சேர்ந்த கான்பெரா ஜெட் விமானங்கள் சென்றன. தரைப் படையினருக்குப் பக்கபலமாய் இருந்ததுடன் எதிரிகளை வேவு பார்க்கும் வேலைகளுக்கும் மிகவும் உபயோகமாக இருந்தன.

காங்கோவில் ஐ. நா. ஆதரவில் பல தேசத்துச் சிப்பாய்கள் ஒன்று கூடியது பெரிய ஆச்சரியமில்லை. ஆனால் அத்தனை நாட்டவருக்கும் தனித் தனியாக அவரவர்களுடைய தேவைகளுக்கும் ருசிக்கும் ஏற்ற விதத்தில் சாப்பாடு தயார் செய்து கொடுத்து அனைவரையும் திருப்திப்படுத்தியதுதான் பேரதிசயமாகும். இந்தப் பொறுப்பு மிக்க கடினமான காரியத்தையும் நமது ராணுவத்தைச் சேர்ந்த 'சர்வீஸ் குழுவினர்'தான் ஏற்றுக் கொண்டனர். உக்கிரமான போர் நடந்தாலும் சரி, எதிரிகளால் பாலங்கள் தகர்க்கப்பட்டுப் போக்குவரத்தெல்லாம் ஸ்தம்பித்துப் போயிருந்தாலும் சரி, எப்பாடு பட்டாகிலும் ஒவ்வொரு சிப்பாய்க்கும் குறிப்பிட்ட வேளைக்குப் பிடித்தமான உணவு கிடைக்க ஏற்பாடு செய்திருந்தது அபார சாதனைதான்.

தகர்க்கப்பட்ட பாலங்களுக்குப் பதிலாகப் புதிய தாற்காலிகமான பாலங்களை ஏதோ மந்திர ஜாலம் போல் உருவாக்குவதில் நமது ராணுவ இஞ்ஜினீயர்கள் ஈடு இணையற்றவர்கள். 'ஜடாட்வில் ரோடு' யுத்தத்தின் போது இவர்களுடைய திறமை நன்கு புலனாயிற்று. முதலில் 'ராஜ்புடானா ரைபிள்ஸ்'ஸைச் சேர்ந்தவர்களும் பின்னர் மதராஸ் ரெஜிமெண்டும் கடாங்கா சிப்பாய்களுடன் போரிட்டு அவர்களைத் துரத்தி அடித்தனர். ஓடிப்போன கடாங்கா சிப்பாய்கள் ஓர் இடத்தில் பாலத்தைத் தகர்த்து விட்டுச் சென்றனர். தாற்காலிகமாக வேறு ஒரு பாலத்தை அவ்விடத்தில் அமைக்க மூன்றே மணி நேரம் தான் ஆயிற்று, நமது ராணுவப் பொறி இயல் நிபுணர்களுக்கு!

தலைமைக் காரியாலயத்துக்குச் செய்திகள் அனுப்பும் பணியில் ஈடுபட்டிருந்த 'ஸிக்னல் மேன்' க்ரூப்பின் சாமர்த்தியத்தைத்தான் என்னவென்று சொல்வது? ரயிலில் பிரயாணம் செய்கையிலேயே தலைமைக் காரியாலயத்துடன் (கம்பியில்லாத் தந்தி) ரேடியோ மூலமாகத் தொடர்பு கொள்ள வேண்டியிருந்தது. அதுகாறும் அவர்கள் பயன்படுத்தி வந்த 'ஏரிய'லில் பழுது ஏதுமில்லையாயினும் ரயிலுக்குள்ளே அது சரியாக இயங்கவில்லை.

சிப்பாய்களை மட்டும் அனுப்பிவிட்டால் போதுமா? காயமடைந்தவர்களுக்குச் சிகிச்சை செய்ய ராணுவ வைத்தியர்களும் நர்ஸ்களும் மகிழ்ச்சியுடன் கிளம்பிச் சென்றார்கள். நானூறு படுக்கைகள் கொண்ட ஆஸ்பத்திரியை அமைக்கவும் நிர்வகிக்கவும் தேவையானவற்றைக் காங்கோவுக்கு உடன் எடுத்துப் போனார்கள். படத்தில் மேஜர் ஜெனரல் எஸ்.பி. பாட்டியா வைத்தியக் குழுவினரை வழியனுப்பி வைக்கிறார்.





**பிரிகேடியர் ராஜூவுக்கு அவரது சீரிய காங்கோப் பணியைப் பாராட்டும் முறையில் ஜனாதிபதி பதக்கம் சூட்டுகிறார்.**

சூழ்நிலையில் கோளாறு. அந்தச் சூழ்நிலைக்குத் தக்கவாறு புதிதான ஏரியல் ஒன்று தயாரிக்க வேண்டியிருந்தது. ஒரு சில விநாடிகள் யோசித்தார் யூசுப். சில சோதனைகளைச் செய்தார். அடுத்த சில நிமிஷங்களுக்குள் புதிய ஏரியல் தயாராகி விட்டது. ரயில் பிரயாணம் முடியும் வரையில் இருபத்தி நாலு மணி நேரத்தில் ஒரு போதுகூட அந்த ஏரியல் அவர்களைக் கைவிடாமல் நல்லபடியாக இயங்கிற்று.

காங்கோவில் நம் காவலர்களுக்குத் துயரகரமான அநுபவங்களும் ஏற்படாமல் போகவில்லை. ஒரு முறை லெப்டினன்ட் ஸ்வரூப் ஸிங்கும் வேறு பலரும் ஐ. நா. ஹெலிகாப்டரில் ஏறிப் பறந்து கொண்டிருக்கையில் கடாங்கா சிப்பாய்கள் மிஷின் கன்களால் விமானத்தைத் தாக்கி வீழ்த்தினார்கள். ஸ்வரூப் ஸிங்குக்குத் தொடையிலும் வயிற்றிலும் குண்டுகள் பாய்ந்து நல்ல காயம். ஏராளமான இரத்தத்தை இழந்து விட்டிருந்தார் அவர். அவருக்குச் சிகிச்சை அளிப்பதற்குப் பதிலாக அவரையும் மற்றவர்களுடன் கைதாக்கித் தங்கள் முகாமுக்கு இழுத்துப் போனார்கள் கடாங்கா சிப்பாய்கள். அங்கே எல்லாரையும் கட்டி வைத்து இரக்கமின்றி அடித்தார்கள். மூன்று மணி நேரத்துக்குப் பிறகுதான் அவர்களை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனார்கள். அங்கே ஆபரேஷன் அறையில் ஸ்வரூப் ஸிங்கின் உயிர் பிரிந்தது.

இப்படி எத்தனையோ இன்னல்களுக்கு இடையில் போராடிய நம் காவலர்கள், தாய் நாட்டினைச் சீன அபாயம் சூழ்ந்ததென அறிந்ததும் துடித்தெழுந்து திரும்பினார்கள்.

பெருமளவுக்கு ஆயுத பலத்தை ஐ. நா. துருப்பினர் நாட வேண்டியிருந்த தருணங்கள் மூன்றே மூன்றுதான். 1961 செப்டம்பர் மாதத்தில் கடாங்கா போர்ப்படையினருடன் நாட்டுப் பற்று எதுவுமின்றிக் கூலிக்காகவே வந்து சேர்ந்திருக்கும் அந்நியர்கள் பலரை வளைத்துச் சிறைப்பிடிக்கத் திட்டமிட்டுச் செயலில் இறங்கியது ஐ. நா. அப்போது பல நாட்களுக்குக் கடாங்காத் தலைநகர் எலிஸபெத்வில்லிலும் அதைச் சுற்றிலும் உள்ள பிரதேசங்களிலும் பல முறைகளில் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்றன. இந்தச் சமயத்தில் போர் நிறுத்தத்துக்கான ஏற்பாடுகளைச் செய்யவும் வேறு பல விஷயங்கள் குறித்து ஷோம்பேயுடன் கலந்தாலோசிக்கவும் ஐ. நா. காரியதரிசி டாக் ஹாமர்ஷீல்ட், ராணுவ ஆலோசகர்கள் எட்டுப் பேர்களுடன் விமான மார்க்கமாய்க் காங்கோவுக்குப் பயணமானார். வடக்கு ரொடீஷியாவின் மேலாக விமானம் பறக்கும்போது எதிர்பாராத விதமாக விபத்து நேர்ந்து விமானஓட்டிகள் உள்பட அனைவரும் மரணமடைய நேர்ந்தது.

அடுத்தாற்போல் 1961 டிஸம்பரிலும் மீண்டும் சென்ற வருஷ இறுதியிலும் கடாங்கா துருப்பினருக்கும் ஐ. நா. படைகளுக்கும் இடையில் மோதல் ஏற்பட்டது. இந்தக் கடைசி கைகலப்பின்போது ஐ. நா. படையினர் ஆறு நாட்கள்வரை தங்களுள் பலருக்கு மரணம் சம்பவிப்பதைக் கண்டும் பொறுமை இழக்காமல் இருந்தனர். இறுதியாக வேறு வழியின்றி ஐ. நா. படையினர் தற்காப்புக்காகச் சுட்டனர். கடாங்காத் துருப்பினரையும் அதிகாரிகளையும் எலிஸபெத்வில் சுற்றுவட்டாரத்திலிருந்து அப்புறப்படுத்துவதில் முனைந்து வெற்றி கண்டனர்.

இவ்வருஷம் ஜனவரி ஒன்பதாம் தேதி ஷோம்பி, இன்றைய ஐ. நா. காரியதரிசி யு தான்டின் தேசிய சமரசத் திட்டங்களைத் தாமதமின்றி அமுல் நடத்தப் போவதாய் அறிவித்தார். யு தான்டின் திட்டத்திலுள்ள பல அம்சங்களுள் முக்கியமானது, கடாங்காத் துருப்புக்களின் உயர் அதிகாரிகள் காங்கோ குடியரசின் ஜனாதிபதி கஸவுபுவிடம் விசுவாசத்துடன் நடந்துகொள்வதாய்ப் பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான்.

பூகோள ரீதியாகவும் சரித்திர ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் நியாயப்படியும் கடாங்கா, காங்கோ குடியரசின் ஒரு பகுதியேயாகும். நாட்டைத் துண்டாடும் ஷோம்பேயின் முயற்சிக்குக் கடாங்கா மக்களிடம் ஆதரவு இல்லை. இதை 1960ம் வருஷத்திய கடாங்கா ராஜதானி தேர்தலில் மக்கள் நிதர்சனமாய் நிரூபித்தார்கள்.

காங்கோவில் அமைதி நிலவச் செய்வதற்கு ஐ. நா. செலவழித்துவந்த தொகை எவ்வளவு தெரியுமா? மாதம் ஒன்றுக்கு ஐந்து கோடி ரூபாய்! அத்துடன் கடந்த இரண்டரை ஆண்டுகளில் ராணுவத் துறையில் மட்டுமல்லாமல் மக்களின் நல்வாழ்வுக்கான பல முன்னேற்றத் திட்டங்களுக்கும் ஐ.நா. சபை பெருமளவுக்குப் பண உதவி அளித்துள்ளது. மேலும், சிறந்த விஞ்ஞானிகள், பொறி இயல் வல்லுனர்களின் அறிவாற்றலும் காங்கோவியருக்குக் கிடைக்க வழி வகுத்திருக்கிறது. 'காங்கோ நிதி'க்கு இதுவரை பல நாடுகள் சேர்ந்து இருபது கோடி ரூபாய்க்கு மேல் அளித்துள்ளன.

காங்கோவில் அமைதி நீடித்து ஆக்க வேலைகளில் மக்களின் மனம் ஈடுபட்டு நாடு சீரும் சிறப்பும் பெற்றுத் திகழும்போது அந்த நல்ல நிலைமை அது அடையப் பலமான அஸ்திவாரம் போட்டதில் நமக்கும் ஒரு பங்கு உண்டு என்று காங்கோ சென்று திரும்பிய ஒவ்வொரு இந்திய ஜவானும் பெருமைப்படலாம். நமது காவலர்களின் பெருமிதத்தில் நமக்கும் பங்கு உண்டு அல்லவா?

நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்!

புதுமை பெறுக...
இதம் பெறுக...
நளினமாய் இருங்கள்
நாள் முழுதும்!

குளுமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

CHIP. G.H

யாருக்கு சொந்தம்

மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரிப்பு...






இல்லை... ஆனால் அவனே எதிர்பாராத சூழ்நிலை உருவாகி துரைசாமியைக் கொன்ற பிறகு காதலையும் கட்டையும் உதறிவிட்டு உயிர் ஆசை முன்னே வந்து நின்றிருக்கிறது. சிவகாமியை அடையத் திட்டமிட்டதை, தான் தப்பித்துக் கொள்ள மாற்றிக் கொண்டு விட்டான்.

# சந்திரனே சாட்சி 31

கதை: கௌசிகன் சித்திரம்: வினு




கவலைப் படாதே. அதோ உன்னைத் தேடி யாரோ இரண்டு பேர் வருகிறார்கள். தனபாலின் ஆட்களாகத்தான் இருக்கும். புத்தி சுவாதீனமில்லாதவனைப் போல நடந்து கொள். நாங்கள் அந்த அறையிலிருக்கிறோம்.







ஐயோ பாவம்! தனபால் இவனைத்தான் போய்ப் பாத்து விசாரிச்சுட்டு வான்னு அனுப்பிச்சாரு. அப்போ நாங்க வரட்டுங்களா! வெளியே எங்கேயும் ஓடிவிடாமல் கட்டிப் போட்டு வையுங்க....





நேர்மையற்ற முறையில் தயாபாலின் பணத்துக்காக கொலையின் குற்றுக்கே காரணம் கற்பித்துப் பொய் சொல்லிய வின்சென்டர்க் கிடைக்காத நல்ல வசதியான சிறைச் சாலையில் விரோதி என்று கருதி வழக்கில் தொடர்ந்து கைது செய்ய உத்தரவிடுகிறேன்.

தூமராசன் கொலைக் கேஸும், கேசவனின் பாத்தியப் பறிப்பு வழக்கிலும் இந்த நீதிமன்றம் தீர்வு செய்து விட்டது என்பதை பெருமிதத்துடன் தெரிவிக்கிறது. அதுவும் ரகுநாதன் அவர்களும், கேசவன் அவர்களும் தாங்கள் செய்யாத குற்றத்துக்காக தண்டனையும் வேதனையும் அனுபவிக்க நேர்ந்ததற்காக இந்த நீதிமன்றம் அவர்களின் மன்னிப்பைக் கோருகிறது.












புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு விருப்பமானது. ஏனெனில் அது எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுடனிருக்க நான் ப்ரோடெக்ஸையே விரும்புகிறேன்"

"எனது மிருதுவான சருமத்தைப் பாதுகாப்பதால் அம்மா ப்ரோடெக்ஸையே விரும்புகிறாள்"




ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும், கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச் சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.

## ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-8-7-TAM.





# கலை வளர்க்கும் கோயில்கள்

## ராணிமேரி கல்லூரி

‘‘கடற் காற்று தென்றலாகத் தவழ்ந்து கொண்டிருந்தது. கதிரவனுக்கு மேகக் கூட்டங்கள் திரையிட்டுக் கொண்டிருந்தன. மலர் சொரிந்த மரங்களில் வீற்றிருந்த புள்ளினங்கள் சுருதி விலகுமோ என்ற கவலையில்லாமல் பல்வேறு குரல்களில் தங்கள் இசையைப் பரப்பிக் கொண்டிருந்தன....’’

வாசகர்கள் இதை ஏதோ சரித்திர, சமூக நாவல்களின் ஆரம்ப வர்ணனைக் கட்டம் என்று நினைத்துப் புரவி மேல் பவனி வரும் கதாநாயகனையோ, பியட் காரின் ஸ்டியரிங்கைப் பிடித்து அலட்சியமாகத் திருப்பும் கதாநாயகியையோ அடுத்தாற்போல் எதிர்பார்த்தால் ஏமாந்து போவார்கள்.

கலைமகளின் கடாட்சம் வேண்டி ராணி மேரி கல்லூரியினுள் காலடி எடுத்து வைக்கும் எந்த மாணவியுமே, மேலே சொல்லப்பட்ட வருணனையைத் தினசரி வாழ்க்கையில் நேரடியாகக் கண்டு அனுபவிக்கப் புண்ணியம் செய்தவர்கள்தான்.

உலகத்திலேயே இரண்டாவது அழகிய கடற்கரை என்று புகழ் பெற்ற சென்னை நகர்க் கடற்கரையிலேயே இயற்கையன்னையின் அரவணைப்பில், இருபத்தி நான்கு மணி நேரக் கடற்காற்றையும், இளஞ் சூரியனின் இன்ப ஒளியையும் ரசிக்கக் கொடுத்துவைத்தவர்கள் இந்தக் கல்லூரி மாணவிகளும் ஆசிரியைகளும்!

**பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்**
**பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்**
**எட்டு மறிவினில் ஆணுக்கிங்கே பெண்**
**இளைப்பில்லை காணென்று கும்மியடி!**

என்று அன்று பாடிய பாரதி கண்ட கனவு எவ்வளவு தூரம் பலித்து விட்டிருக்கிறது என்பதை இந்தக் கல்லூரி ' வகுப்புக்களில் வீற்றிருக்கும் நூற்றுக்கணக்கான மாணவிகளைப் பார்க்கும்போது நிதர்சனமாகத் தெரிகிறது.

மத்திய சர்க்காரில் மந்திரியாகப் பணியாற்றுவதிலிருந்து ராஜ்ய சர்க்காரில் மருத்துவத் துறைத் தலைவியாகப் பணியாற்றுவது வரை இந்தக் கல்லூரி மாஜி மாணவிகள் எங்கும் வியாபித்திருக்கிறார்கள் என்றால், 'எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண் இளைப்பில்லை' என்று கண்கூடாகக் காண்கிறோமல்லவா?

ஸ்ரீமதி லட்சுமி மேனன், (வெளி விவகார இலாகா உதவி மந்திரி) ஸ்ரீமதி மரக்காயர் (ராஜ்ய மருத்துவத் துறைத் தலைவர்) ஸ்ரீமதி எச். எம். சர்மா (ராஜ்ய பொது சுகாதாரத் துறைத் தலைவர்) முதலியவர்கள் இந்தக் கல்லூரி மாணவிகளாக இருந்தவர்கள்.

1914ம் ஆண்டு 'சென்னை மகளிர் கல்லூரி' என்ற பெயருடன் சர்க்காரால் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கல்லூரி 1917ம் ஆண்டில் ராணி மேரி கல்லூரி என்ற புதிய பெயரைப் பெற்றது.

இந்தக் கல்லூரியின் தங்க விழாக் கொண்டாட்டம் வரும் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட விருக்கிறது. அதற்கான திட்டங்களை இப்போதே வகுக்கத் தொடங்கி விட்டார் இந்தக் கல்லூரி முதல்வர் ஸ்ரீமதி ஐராவதி அம்மையார்.

அவரைச் சந்திக்கப் போயிருந்த சமயத்தில் அவர் 'அட்மிஷன்' பிரச்னையில் தீவிரமாக மூழ்கியிருந்தாலும், அதைச் சற்று மறந்து விட்டு இனிமையுடன் பேசினார். சென்ற தடவையைப்போல் நான்கு மடங்கு விண்ணப்பங்கள் வந்து குவிந்திருக்கின்றனவாம் இந்த ஆண்டு! எந்தப் பெற்றோர்களும்



தங்களது பெண்ணுக்கு இடமில்லை என்ற ஏமாற்றத்தைத் தாங்கிக்கொள்ளத் தயாராக இல்லை. இந்த நிலையில் எந்தப் பிரின்ஸிபால் பாடும் பரிதாபத்துக்குரியதுதானே!

இந்தக் கல்லூரி முதல்வர் மிகுந்த கண்டிப்புக்காரராம். ஆனாலும் மாணவிகளின் மனோதத்துவம் தெரிந்து விட்டுக் கொடுக்கவும் தயங்க மாட்டாராம்!

இப்படித்தான் ஒரு சமயம் ஹாஸ்டல் மாணவிகளை யெல்லாம், பொதுவாக அசெம்பிளி ஹாலில் வந்து அமர்ந்து குறிப்பிட்ட நேரம் வரை தங்கள் பாடங்களைப் படிக்கும் படி உத்தரவு போட்டார். இந்த யோசனை மாணவிகளுக்கு உகந்ததாக இல்லை. 'நாங்கள் எங்கள் அறைகளிலேயே படிக்





கிறோம். அதுதான் வசதி என்று தோன்றுகிறது' என்று வாதித்தார்கள். முதல்வர் இணங்கவில்லை.

பொது ஹாலில் போய் அமர்ந்த மாணவிகள் சும்மாவா இருந்தார்கள்?..

சிலர் ரகசியக் குரலில் பாட ஆரம்பித்தார்கள். ஹிந்திப் பாட்டுக்களும், ஆங்கில சங்கீதமும், கர்நாடக தேங்களும் காற்றிலே மிதக்க ஆரம்பித்தன. பிரின்ஸிபால் விரைந்து வந்து சேர்ந்தார்.

''இந்தச் சூழ்நிலையில் எப்படி மிஸ் படிப்பது?'' என்று எல்லோரும் ஏகோபித்த குரலில் தங்கள் பாட்டுக் கச்சேரியை நிறுத்திவிட்டுக் கேட்டார்களாம்!

இந்தக் குறும்புக்கார மாணவிகளை நன்கு புரிந்து கொண்ட பிரின்ஸிபால் மனமிரங்கி, ''சரி சரி! நீங்கள் உங்கள் அறைக்கே போகலாம்!'' என்று சொன்னதும் அத்தனை பேரும் வெற்றிப் பெருமிதத்துடன் வீரநடை போட்டுத் திரும்பினார்களாம்.

ஒரு குறிப்பிட்ட பாடப் பிரிவைச் சேர்ந்த ஆசிரியையிடம் கைக் கடிகாரம் இடையாதாம். அவர் பாடம் நடத்திக் கொண்டிருக்கும்போதே அன்று எடுத்துக் கொண்ட பாடத்தை அந்த 'பீரியட்'டுக்குள் முடித்துவிட வேண்டும் என்ற ஆர்வத்துடன் முன் ஆசனங்களில் அமர்ந்திருக்கும் மாணவிகளைப் பார்த்து, ''டைம் என்ன ஆகிறது?'' என்று கேட்பாராம். இரண்டு மூன்று மாணவிகள் தத்தம் கைக் கடிகாரங்களைக் கவனமாகப் பார்த்து ஏகோபித்த குரலில் 'இன்னும் பத்து நிமிடங்கள் இருக்கின்றன மிஸ்'' என்பார்களாம்.

அந்த ஆசிரியை சுத்தமாக அந்த நிமிடத்திலிருந்து உத்தேசமாக மேலும் ஒன்பது நிமிடங்கள் பாடம் நடத்திவிட்டு எழுந்து போய்விடுவார். அவர் தலை மறைந்ததும் மாணவிகள் எல்லாம் சிட்டாய்ப்பறந்துவிடுவார்கள்.

ஆனால் உண்மையில் வகுப்பு முடிய இன்னும் அரைமணிநேரம் இருக்கும்!

ஆசிரியையிடம் கடிகாரம் இல்லை என்ற தைரியத்தில் முப்பது நிமிடங்களைப் பத்து நிமிடங்கள் என்று சொல்லித் தப்பிக்கும் அந்த மாணவிகளின் ஒரே பிரார்த்தனை இது தான்: ''ஆண்டவனே! இந்த மிஸ்ஸின் உள்ளத்திலே கைக்கடிகார ஆசையைத் தோற்றுவிக்காதே!''

சக மாணவிகளுக்கு வேடிக்கையான பெயர்கள் சூட்டி மகிழ்வதில் இந்தக் கல்லூரி மாணவிகளின் திறமைக்குஈடு இணை கிடையாது என்று ஒரு பழைய மாணவி பெருமையுடன் குறிப்பிட்டார்.

ஒரு மாணவியின் பெயர் 'ஸ்வதந்திரா'வாம். ஆனால் அவளை எல்லோரும் 'மிஸ் காங்கிரஸ்' என்று தான் கூப்பிடுவார்களாம். சட்டென்று இந்தப் புனை பெயரில் உள்ள நகைச்

களை புரியவில்லை. அப்புறம்தான் குமாரி ஸ்வதந்திரா ஒரு மந்திரியின் புதல்வி என்று தெரிய வந்தது!

உயரமாக இருந்தால் போயிற்று! அந்த மாணவியின் பெயர் 'மிஸ் எவரெஸ்ட்' ஆகி விடுமாம்.

அநேகமாகக் கல்லூரிகளில் மாணவ, மாணவி தலைவர் தேர்தலும், மற்ற நிர்வாகங்களில் பங்கு கொள்ளும் மாணவ மாணவிகளின் தேர்தலும் வருட ஆரம்பத்தில் நடக்கும். ஆனால் இந்தக் கல்லூரியில் அந்தத் தேர்தலை வருடக் கடைசியில் வைத்துக் கொண்டு அடுத்த ஆண்டுக்கான நிர்வாகிகளை முதல் ஆண்டு இறுதியிலே தேர்ந்தெடுத்து விடுவது வழக்கம்.

வருடக் கடைசி வரை, யாரையும் மதிக்காமல் அகங்காரத்துடன் நடந்து கொள்பவர்கள் எல்லாம் ஜனவரி பிப்ரவரி மாதங்களில் வெகு பவ்வியமாகக் காண்பவர்களையெல்லாம் கரம் குவித்து வணங்கி க்ஷேம லாபம் விசாரிப்பார்களாம். இதிலிருந்தே அவர்கள் தேர்தலுக்கு நிற்கவிருக்கும் அபேட்சகர்கள் என்றும் மற்ற மாணவிகளின் வோட்டுக்களைப் பெறத் தங்கள் போக்கை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் ஊகித்து விடலாமாம்.

பரீட்சை நாட்களில், நள்ளிரவில் ஆழ்ந்த தூக்கத்தில் லயித்துக் கனவுகள் கண்டுகொண்டிருக்கும் வேளையில் கூட, வராந்தாவில், மாணவிகள் படிப்பதைப் பரிசோதிக்க வரும் ஹாஸ்டல் வார்டனின் பூப்போன்ற காலடி ஓசை கேட்ட மாத்திரத்தில் இந்த மாணவிகள் எழுந்து கைக்கு அகப்பட்ட புத்தகத்தை எடுத்துப் படிப்பது போல் நடிப்பதில் அதிக சமர்த்தர்கள். வெகு குறைவான சந்தர்ப்பங்களில்தான் ஒன்றிரண்டு பேர்கள் புத்தகத்தைத் தலைகீழாகப் பிடித்து அகப்பட்டுக் கொள்ளும் தருவாயில் விழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

தேசிய பாதுகாப்பு நிதிக்குக் காணிக்கை செலுத்திய விஷயத்திலும் இந்தக் கல்லூரி மாணவிகள் தனிப்பெருமை தேடிக் கொண்டிருக்கிறார்கள். இன்று வரை பத்தாயிரத்து ஒரு ரூபாய்களையும் முப்பத்திரண்டு சவரன் பெறுமான தங்க நகைகளையும் வழங்கியிருக்கிறார்கள். யுத்த முனைக்கு அனுப்பக் கம்பளித் துணிகளையும் தயார் செய்தார்கள்.

கல்வியில் காண்பிக்கும் அக்கறையின் அளவைத் தேகாப்பியாசத் துறையிலும் காண்பிக்கும் மாணவிகள் இங்கு இருக்கிறார்கள். சென்ற ஆண்டு இந்தத் துறையில் முன்னணி வீராங்கனைகளாக விளங்கியவர்கள் நதேரா, கவ்வீ, ஹரிபூஞ்சா, ருஷிமோனப்பா ஆகியோர்.

1949ம் ஆண்டு இந்தக் கல்லூரியில் நானூறு மாணவிகள்தான் படித்துக் கொண்டிருந்தார்கள். அப்போதிருந்த கட்டடங்கள்தான் இன்றும் உபயோகத்தில் இருக்கின்றன. கட்டடங்கள் விஸ்தரிக்கப்படவில்லை. ஆனால் இன்றைய மாணவிகளின் தொகையோ ஏறத்தாழ ஆயிரத்து இருநூறு!

இந்தக் கல்லூரி முதல்வர் மிஸ் ஐராவதி அம்மையார் பூனா பாட சம்பந்தப்பட்ட பிரிவுகளில் பிரத்தியேகத் தேர்ச்சி பெற்றவர். நாட்டில் உள்ள பல சர்வகலாசாலைகளுடனும் பரீட்சாதிகாரி என்ற முறையில் தொடர்பு கொண்டவர். சரளமாக, தெளிவாக விஷயங்களை விவாதிக்கிறார்.

"இந்த ஆண்டு உங்கள் பெண்ணுக்கு இங்கு இடம் அகப்படுவது எளிதான காரியம் என்று தெரியவில்லை. ஒரு வருடம் வீட்டில் இருந்து, தையல், சமையல் வேலைகளில் பயிற்சியடையட்டுமே! அடுத்த ஆண்டு இந்த இடப் பிரச்னை சமாளிக்கக் கூடியதாக இருக்கும் என்று நினைக்கிறேன்" என்ற முதல்வரின் வார்த்தைகளைக் கேட்கும் எந்தத் தந்தையும், தாயும், "ஐயா! என் பெண்ணுக்கு அந்தக் காரியங்களில் எல்லாம் ருசி கிடையாதே! கல்லூரியில் படிக்க வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறாள். அவள் ஆசையை எப்படியாவது நீங்கள்தான் பூர்த்தி செய்ய வேண்டும்" என்றுதான் பதிலளிக்கிறார்களாம்.

இந்த நிகழ்ச்சியைச் சொல்லிக் கல்லூரி முதல்வர் எப்படிப் பெற்றோர்கள் தங்கள் பெண்களைப் பல கோணத்திலிருந்தும் பார்த்து உருவாக்கும் கடமையிலிருந்து நழுவுகிறார்கள் என்பதைக் குறிப்பிட்டார்.

இந்தக் கல்லூரியில் 'குடும்பக் கலை' பாடம், மூன்று வருடப் படிப்புக்கும், அதற்கும் மேலான ஆராய்ச்சி வகுப்புகளுக்கும் அளிக்கப்படுகிறது. மாணவிகள் அவைகளை விரும்பி எடுத்துக் கொள்கிறார்களாம். இந்த ஆண்டிலிருந்து, பி. ஏ. வகுப்பில், சரித்திர பொருளாதாரப் பாடங்களைத் தமிழில் கற்க வசதி செய்து, அதற்கான விசேஷ சலுகைகளையும் சர்க்கார் அறிவித்திருக்கிறது. ஆனால் மாணவிகள் என்னவோ, இந்தப் பாடங்களைத் தமிழில் படிக்க ஆர்வம் காட்ட முன்வரவில்லை.

"சீலத்தையும் பண்பையும் கட்டாயப்படுத்தி வளர்ப்பதைவிட, அவைகள் மாணவிகளின் உள்ளங்களில் தானாகவே வளரும் சூழ்நிலையைத் தோற்றுவிப்பதுதான் எங்கள் லட்சியம். அத்தகைய சீலமும் பண்பும் என்றென்றும் அந்த மாணவிகளுக்கு உறுதுணையாக விளங்கும். 'பகுத்தறிவு; பரந்த நோக்கம்' என்ற இரண்டு சொற்கள்தான் எங்கள் கல்லூரி வாழ்க்கையின் குறிக்கோளில் அடங்கியிருக்கிறது" என்று பெருமையுடன் கூறினார் மிஸ் ஐராவதி அம்மையார். தொடர்ந்து, "இன்று பாரத நாட்டிலுள்ள பல் வேறு பெண்கள் கல்லூரிகளில் முதல்வர்களாகப் பணியாற்றும் பெண்மணிகளில் எண்பது சதவிகிதத்துக்கும் மேலானவர்கள், இந்த ராணி மேரிக் கல்லூரித் தயாரிப்புக்களாவர்" என்றும் தெரிவித்தார்.

கல்லூரிக் கட்டடத்திலேயே, தங்கி, நாள் முழுதும் கல்விக்குச் சேவை செய்யும் இந்த அம்மையாரைச் சுற்றிக் கல்வி மணமும் தெய்வீக மணமும் கமழ்கின்றன. ஆம்! தம் அறைக்குப் பக்கத்தில் மற்றொரு சிறு அறையில் ஒரு பூஜை மண்டபத்தையே உருவாக்கித் தெய்வத் திரு உருவங்களைத் திரட்டி வைத்திருக்கிறார்.

வருடம் தோறும் ஆயிரக்கணக்கான மாணவிகளின் வருங்காலத்தைச் சீராக அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் இவருக்கு அந்தத் தெய்வபக்தி போதிய ஆத்ம பலத்தைக் கொடுக்கும் என்று எதிர்பார்க்கலாம் அல்லவா?

# எடையிழுல் ஏக்கமா?

# இளைப்பது எளிதே

# Limical

## பருமனைக் குறைக்க புதிய, பலனளிக்கும் முறை

லிமிகல் என்பது என்ன? உடல்நிறை ஆரோக்கியமான அளவுடன் இருக்கத் தேவையான கலோரிகள் மட்டும் கொண்டு சரியான போஷாக்குள்ள பரிபூர்ண மாவு உணவுதான் லிமிகல். இதை அருந்துவதால் உடல் கனம் குறையுமே தவிர ஆரோக்கியத்துடன் திகழ்வீர்கள்.

லிமிகல் வழக்கமான ஆகாரத்திற்குப் பதிலாக ஏற்கத்தக்க உணவு. லிமிகல் மட்டுமே அருந்திஞல் உடல் கனம் விரைவில் குறையும்; லிமிகலும், குறைந்த கலோரி உணவுமாக மாறி மாறி உட்கொண்டால் பலன் படிப்படியாகத் தெரியும். எப்படியாஞலும் லிமிகலிஞல் அபாயமின்றி, எளிதில், சுகமாக எடையைக் குறைக்கலாம்.




லிமிகல் அருந்தியவர்களின் உடல்நிறை வாரத்திற்கு 3 லிருந்து 5 பவுண்டுகள் வரை குறைந்திருக்கிறது. லிமிகல் அருந்தும்போது உங்கள் தினசரி அலுவல்களைக் கவனித்து வரலாம்.

**இந்த எளிய முறையில் இளைத்து ஆரோக்கியம் பெறுங்கள்—உங்கள் டாக்டரும் லிமிகலைத்தான் சிபார்சு செய்வார்.**

வாழைப்பழம், சாக்கலேட் மற்றும் ஆரஞ்சு இன் சுவைகளில் எல்லா முக்கிய மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

இதர விபரங்கட்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுங்கள்: ஸாராபாய் கெமிகல்ஸ், தபால் பெட்டி எண் 1688, பம்பாய்-1.

எடை குறைந்து எடுப்பாய் விளங்க லிமிகல்



# மகத்தான வெற்றி

இந்த ஆண்டு ஜனவரி 3ஆம் தேதியன்று, புதிப்பிப்பதற்கும் பெரிதாக்குவதற்குமென்று ஜம்ஷெட்பூரில் "E" உருக்கு உலை இயங்குவது நிறுத்தப்பட்டது. அது, 2,100 டன் ரிப்ராக்டரிகள், 1,700 மீட்டர் பைப்பிங், 7,600 மீட்டர் மின்சார கேபிள்கள், 1,100 டன் ஸ்டீல்-உருக்கு வேலைப்பாடுகள் ஆகியவை சம்பந்தப்பட்ட மிகப் பெரியதோர் பணியாகும்.

அதனை நிறைவேற்ற முதலிலே திட்டமிடப்பட்ட கால அளவு 180 நாட்களை 90 ஆக குறைக்கப்பட்டதும், அநேகர் அது இயலாத காரியம் என்று எண்ணினர். ஆனால் டாடா ஸ்டீலின் எஞ்ஜினியர்கள், தொழில் வல்லுநர்கள், பணியாளர்கள் ஆகியோர் கொண்ட குழு அந்தச் சவாலை ஏற்று, குறிப்பிட்ட காலத்திற்கு 6 நாட்கள் முன்னதாக அதாவது 84 நாட்களுக்குள்ளேயே அப்பணியைச் செய்து முடித்தனர்.

முதலில் நாளொன்றுக்கு 315 டன் உற்பத்திசக்தி கொண்டிருந்த "E" உருக்கு உலை 45 ஆண்டுகளுக்கு முன் ஐக்கிய அமெரிக்க நாடுகளிலிருந்து (U.S.A.) பழசாக வாங்கப்பட்டது. இப்பொழுது அந்த விகித சக்தி ஸிண்டர் பர்டன் இன்றி நாளொன்றுக்கு 660 டன் பிக் அயர்ன் அல்லது ஸிண்டரும் ஸைஸ்டு அயர்ன் தாதுப் (ore) பொருளும் சேர்ந்து 725 டன் சக்தியாக உயர்த்தப்பட்டிருக்கிறது.

இம்மகத்தான வெற்றியே, திறமை மிக்க குழுவின் கூட்டுப்பணி, தொழில் நுணுக்க அறிவு, குறைந்த முதலீட்டில் மிக அதிக அளவு உற்பத்தி பெற, தொடர்ந்த முயற்சிகள் ஆகியவைகளுக்கு மற்றொரு எடுத்துக்காட்டாகும். இதனை விளங்கச் செய்யும் ஜம்ஷெட்பூரிலே தொழில், வெறும் ஜீவனோபாயத்திற்கு மட்டுமல்ல வாழ்க்கைக்கே வழியாகும்.

## ஜம்ஷெட்பூர்

எஃகு நகரம்

தேசியப் பாதுகாப்பு நிதிக்குத் தாராளமாக வழங்குங்கள்

The Tata Iron and Steel Company Limited JWTTN 14

# ஒற்றுமைக்கு ஆங்கிலமே

டாக்டர் ஏ. லெக்ஷ்மணசுவாமி முதலியார்



டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியாரைப் போல் அரசியல் அறிவும், கல்வி நிர்வாக அநுபவமும், சட்டசபை நடவடிக்கை ஞானமும், நியாய உணர்ச்சியும் பெற்றுள்ளவர் மிகச் சிலரே இருப்பார்கள். சென்னை சர்வகலாசாலையின் உபஅத்யாக்ஷர். எதிர்ப்பே இன்றி யதேச்சையுடன் இயங்கி வந்த சென்னை சட்ட சபையில் எதிர்க்கட்சித் தலைவராக உயர் பணியாற்றியவர். சர்வதேச மகாநாடுகளில் பங்குகொண்டு இந்தியாவுக்கு உலக அரங்கில் நற்பெயர் வாங்கித் தந்தவர். ஆட்சி மொழி ஆங்கிலமா — ஹிந்தியா என்பதைப் பற்றி உரிமையுடன் பேசப் பூரணத் தகுதி வாய்ந்தவர்.

இந்தியாவை ஐக்கியமும், திருப்தியும், செழிப்பும் உள்ள ஒரு சமுதாயமாகச் சமைப்பதே இன்றைய தேவை. இவ்விஷயமாக நாடு சமாளிக்க வேண்டிய பிரச்னைகள் பல உள்ளன. தேசத்தின் சக்திகளைத் திரட்டி இந்தப் பிரச்னைகளைத் தீர்ப்பதிலேயே ஈடுபடுத்த வேண்டிய தருணம் இது. இச்சமயத்தில், தக்க பாகுபாடு செய்து பார்க்கக்கூடிய யாரும் இரண்டாந் தரமாகக் கருதக் கூடிய மொழிப் பிரச்னையில் கவனம் திருப்பப்பட்டிருப்பதையும், கருத்து வேற்றுமைகளும் பூசல்களும் கிளம்பி விருப்பதையும் துர்ப்பாக்கியமென்றே கருதுவர். 'எல்லா மக்களும் ஒரே மொழியைப் பேசினால் தான் ஒரு நாட்டின் ஐக்கியம் வலியுறும்' என்ற வாதம் சரித்திர உண்மைகளுக்குப் புறம்பானது. ஸ்விட்ஜர்லாந்து, கனடா, தென் ஆப்பிரிக்கா முதலிய பல நாடுகள் குறைந்த ஜனத்தொகை கொண்டவை எனினும் அவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகள் அரசாங்க அலுவல்களுக்குப் பயன்படுத்தப்பெறுகின்றன. நாற்பது கோடி மக்கள் தொகை கொண்ட ஒரு நாடு—பல நூற்றாண்டுகளாகப் பன்மொழிகள் வழங்கி வந்த ஒரு நாடு—திடீரெனத் தனது அரசியல் அலுவல்களுக்கு ஒரே பொது மொழியை வைத்துக் கொள்ள முடிவு செய்ததாக இதுவரை நாம் கேட்டதில்லை.

**சரித்திரத்துக்குப் புறம்பானது ......**

குறிப்பிட்ட ஒரு மொழியை நாற்பத்தைந்து சத விகிதத்தினர் பேசுவதாகக் கூறுவதால் அப்படிக் கூறுபவர்களின் கோரிக்கை உண்மையாகிவிடாது. நாற்பத்தைந்தென்ன? ஐம்பது சத விகிதத்தினர் கூட ஒரு மொழியைப் பேசலாம். ஹிந்தியைப் பேசுபவர்கள் எத்தனை சத விகிதம் இருப்பினும் அவர்களில் **எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின்** சத விகிதம் என்ன என்பதே இப் பிரச்னையில் முக்கியம். அவர்கள் இன்றும் சிறுபான்மையினரே.

**உண்மை என்ன?**

நமக்கென ஒரு அரசியல் சாஸனத்தை வகுத்துக்கொள்ள வேண்டும் என்று மக்கள் ஆர்வமாக இருந்த சமயத்தில் — சுதந்திரப் பெருக்கு என்ற புது வெள்ளம் நாட்டின் பல சக்திகளைப் பிரமிப்பித்திருந்தபோது — ஏதோ ஒரு குறிப்பிட்ட மொழியை நாட்டின் அரசாங்க மொழியாக உபயோகிக்க வேண்டும் என்ற சட்ட ஷரத்து நிறைவேற்றப்பட்டது. அதையெல்லாம் இங்கு விவரிப்பது அவசியமல்ல. என்றாலும் ஒன்றை மட்டும் நினைவு கொள்ளலாம். இந்த ஷரத்து நிறைவேற்றப்பட்டபோதுகூட காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் சபாநாயகர் ஸ்தானத்திலிருந்த அதன் தலைவரின் வோட்டு ஹிந்திக்குச் சாதகமாக அளிக்கப்பட்டதால் அந்த ஒரே வோட்டு வித்தியாசத்தில்தான் ஷரத்து காங்கிரஸ் கட்சியால் ஒப்புக் கொள்ளப் பட்டது எனத் தெரிகிறது.

ஒரு மொழி அந்நியம் என்றும் இன்னொரு மொழி சுதேசி என்றும் கூறுவது முழு உண்மையாகாது. அந்நியம், சுதேசி என்பது பல விஷயங்களைப் பொறுத்தது. ஹிந்தி வழங்காத பகுதி மக்களில் பெரும்பாலோருக்கு ஹிந்தியும் ஆங்கிலத்தைப் போலவே அந்நியம்தான். உணர்ச்சிகளை ஒரு பக்கம் வைப்போம். ஹிந்தி பேசாத மக்கள் தங்கள் தேசப் பற்றைக் காட்டிக் கொள்வதற்கு இந்திய மொழி ஒன்றைப் பிரமாணமாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் கிடையாது. அவ்வாறு இந்தியாவில் வழங்கப்படும் மொழியை அறிவதொன்றுமேயே தேசப் பற்றை நிர்ணயிக்க வேண்டுமானால் அஸ்ஸாமிய மொழி, வங்காளி, பஞ்சாபி,

**தேசப் பற்று மொழியிலா?**

தென்னிந்திய மொழிகள் இவையும் ஹிந்தி கோரும் அந்தஸ்துக்கு உரிமை கொண்டாடுவது நியாயமே!

நிற்க. பிரச்னையின் முக்கியமான அம்சம் இதுதான்: இந்தியா அறிவுப் பாதையில் சென்று எல்லாத் துறைகளிலும் செயலாற்றவும், தினந்தோறும் வேகமாக மாறி வரும் இன்றைய உலகில் தனது பங்கை நிறைவேற்றவும் எது தேவை? ஐக்கியத்தை உண்டாக்க ஒரு மொழி அவசியம் என்றெண்ணி அதனால் இந்த இகா வளர்ச்சிகளைப் புறக்கணிக்கலாமா? ஒரு நாட்டின் ஐக்கியத்தை மொழி ஒன்றுமேயே ஏற்படுத்தலாம் என்றோ, தேச ஐக்கியத்தில் மொழி ஒரு முக்கியமான அம்சம் என்றோ கூட எண்ணுவது தவறாகும். ஐரோப்பிய மொழிகள் பலவற்றுக்கும் பொதுவான சொற்களைக் கொண்டு தயாரித்த எஸ்பெரான்டோ மொழியைப் பரப்ப வேண்டுமெனக் கூறி வந்தவர்கள் வெற்றி அடையாததற்கு இதுவே காரணம். விஞ்ஞானமும், தொழில் நுணுக்கமும் கனவேகமாக முன்னேறி வரும் இன்று பின் தங்கிய நாடுகள் முன்னேறிய நாடுகளுக்குச் சமமாக வரவேண்டும் என்று துடிக்கின்றன. இம்முறையில் நாடு விரைவில் முன்னேற எது உதவும் என்று சிந்திப்பதுதான் தேசத்தின் தேவையாகும். 'இவர்கள் ஆங்கில மொழியே சாசுவதமாக இருக்க வேண்டும் என்று சொல்கிறார்களே!' என்று குறைப்படுவது சரியல்ல. நாடு விரைவாக முன்னேறுவதற்காக வாய்ப்புக்களைப் பெறவேண்டும் என்றும் இதற்காக ஒரு மொழி நீடிக்க வேண்டும் என்றும் விரும்புகிறவர்கள் குறுகிய நோக்கமுள்ளவர்கள், என்றும் தீர்க்க தரிசனம் இல்லாதவர்கள் என்றும் கூறுவதால் ஒரு நன்மையும் ஏற்படாது. ஐம்பது அல்லது நூறு ஆண்டுகளுக்குப்பின் என்ன நிகழும் என்று நிகழ்காலத் தலைமுறையினரால் அறிய முடியாது. எனவே நாம் அத்தியாவசியங்களைக் கவனிப்போம். வீண் முழக்கங்களை விடுவோம்; நாட்டுப் பற்று என்பதைப் பற்றிய தவறான கருத்துக்களைக் கைவிடுவோம்; நாடு படிப்படியாக முன்னேற என்ன செய்ய வேண்டுமோ அதை மட்டும் செய்வோம்.

முன்னேற்றத் துக்கு வழி



இப்படி யெல்லாம் ஆராய்ந்து பார்க்கும்போது இந்தியாவானது பிண்டாரிகள் என்ற பிடாரிகளின் அநாகரிக காலத்துக்குச் செல்லாதிருக்க வேண்டுமானாலும் உயர் கல்விப் போதனை மொழியாக ஆங்கிலம் இருப்பது எவ்வளவு உபயோகமானது என்று தெரியும். 'உபயோகமாக இருக்கும்' என்று கூறினால் மட்டும் போதாது. ஆங்கிலம்தான் அத்யாவசியம் என்று சொல்லலாம். இன்றைக்கோ, இனி வரப்போகிற பல்லாண்டுகளுக்கோ நாடு முன்னேறுவதற்கான தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாத ஒரு மொழியைக் கற்பதில் ஹிந்தி பேசாத மக்கள் தங்கள் பொழுதைச் செலவிட முற்படுவது புத்திசாலித்தனமோ, சாமர்த்தியமோ ஆகாது. தென்னாட்டு மக்களின் உணர்ச்சிகளை ஆழப் புண்படுத்தும் முறையில் சில ஹிந்தி ஆதரவாளர்கள் கண்டனம் செய்வது அநியாயமாகும்; அடிக்கடி பேசப்படும் தேசிய ஒருமைப்பாட்டுக்கு இத்தகைய கண்டனங்கள் ஊறு விளைவிக்கும். ஹிந்தி மொழி பேசும் எல்லாப் பகுதிக்காரர்களும் தங்களுக்குள் ஏதோ பெருத்த ஒருமைப்பாட்டுடன் இருப்பதாகவோ, மற்றப் பகுதியினரை விடத் தங்களுக்குள் அதிக அன்பை வளர்த்துக்கொண்டிருப்பதாகவோ, தேசப் பற்றில் சிறந்தவர்களாக விளங்குவதாகவோ எண்ண இடம் இல்லை.

இமாலயத் தவறு....

பூகோள ரீதியில் தன்னிறைவு பெற்ற அங்கங்களாக இந்தியாவைப் பிரிப்பதற்குப் பதில் மொழிவாரி ராஜ்யங்கள் அமைத்தது இமாலயத் தவறாகும். அதிகாரத்திலுள்ளவர்கள் விவேகத்தைப் பெறுவதற்கான நடவடிக்கைகளை எடுத்திருந்தால் இப்போதுள்ள குழப்பமும், தாறுமாறுகளும் ஒருபோதும் நிகழ்ந்திரா.

சர்வதேச சபைகளில் ஒரே சமயத்தில் எல்லா மொழிகளிலும் நடப்புக்களை அருமையாக மொழிபெயர்த்துத் தருகிற சாதனம் இருப்பதைக் கண்டு 1951ம் ஆண்டில் நான் அப்போதைய லோக சபையின் நாயகராக இருந்த ஸ்ரீ ஜி. வி. மாவ்லங்கர் அவர்களுக்கு இச் சாதனத்தை நாமும் பயன்படுத்திக்கொள்ளலாம் என யோசனை தெரிவித்து எழுதியிருந்தேன். இதனால் சபையின் நடப்புக்கள் எல்லோருக்கும் புரியும். இந்த உபகரணத்துக்குத் தேவைப்படும் செலவும் மிகக் குறைவாகவே இருந்தது. அதாவது நமது லோக சபைக்கு மூன்று லட்சம் ரூபாய் பிடித்திருக்கும். எனினும் மூன்று மாதங்களுக்குப் பின் எனக்கு ஸ்ரீ மாவ்லங்கர் எழுதினார்: 'இது நாட்டில் ஹிந்தியைப் பரப்ப உதவாதே!' என்று. இன்றைக்கும் நாம் அன்று போலவே லோகசபையின் ஏராளமான அங்கத்தினர்கள் நடப்புக்களைப் பின்பற்ற முடியாமல் இருக்கும் காட்சியைக் கண்டு வருகிறோம். இவர்க

ஜெல்வாம் சபையின் ஆலோசனையில் பங்கு கொள்ள வேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறவர்கள்!

மொழிகள் விஷயத்தில் இன்னும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் இருக்க வேண்டியது இந்தியாவின் எதிர்காலத்துக்குப் பிராணாதாரமாகும் எனக் கருதுபவர்கள் தங்கள் மனத்திலிருப்பதை ஐயம் திரிபற எடுத்துச் சொல்ல வேண்டும்.

மக்கள் எதில் ஈடுபாடு கொள்ள வேண்டுமோ அதில் அவர்களின் கவனம் செல்ல முடியாதபடி வேறு திசைகளில் அவர்களை வழிப்படுத்தித் திருப்புவதும், 'அந்நிய மொழி' என்று பெயர் சூட்டப்பட்ட ஒரு மொழியின் உபயோகத்தைக் கூறுபவர்கள் விதேசியத்தை வற்புறுத்துகிறார்கள் என்று குற்றம் சாட்டுவதும் அர்த்தமற்ற காரியம்.

உலகமானது துரித காலத்தில் மாறி வருகிறது. அடுத்த சந்ததிக்குப் பின் எதிர் காலச் சூழல் எப்படி இருக்கும் என்றே யாரும் கூற முடியாது. இச்சமயத்தில் கார்டினல் நியூமனின் இந்த வரிகளைத்தான் என்னால் மொழிய முடிகிறது: மாறும் உலகம்

**அழைத்துச் செல் அன்பொளியே**
**சூழ்ந்திருக்கும் ஆழ்இருளில் வீழ்ந்திருக்கும் அடியேனை**
**அழைத்துச் செல் முன்னேறுக நீ!**

**எட்டாத காட்சிக்குக் கோட்டை கட்டவில்லை:**
**ஓரடிசென்றாலும் அடியேனுக்கது போதும்**

# வடக்குக்கும் தெற்குக்கும் இணைப்புப் பாலம்

## கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி



**பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் சென்னை சர்வகலாசாலையில் சரித்திரப் பகுதிக்குத் தலைவராகச் சிறப்புப் பணியாற்றியவர். இந்தியாவின் வரலாறு பற்றி நுட்பமான ஆராய்ச்சிகள் செய்து அவர் இயற்றியுள்ள நூல்கள் பல. அரசியலில் ஈடுபடாதவராயினும் எந்தப் பிரச்னையையும் ஆராய்ச்சி மனப்பான்மையுடன் ஆசிரியர் ஸ்தானத்திலிருந்தே நோக்கும் பண்புடையவர். ஹிந்தியை ஆட்சி மொழியாக்குவது எவ்வளவு தவறு என்பதைத் தெளிவுடன் விளக்கி வைக்கிறார்.**

ஆட்சி மொழிச் சட்டம் நிறைவேறிய பின்னரும் ஆட்சி மொழி பற்றிய விவாதம் ஓயவில்லை. ஆங்கிலம் ஆட்சி மொழியாக நீடிப்பது பற்றிப் பிரதமர் நேருஜி கொடுத்த வாக்குறுதிகள் இச்சட்டத்தில் இடம் பெறவில்லை என்று பரவலாக அபிப்பிராயம் மக்களிடையே நிலவுகிறது. தாம் சொன்ன உறுதிமொழிகளைத் தாமே ''சொந்த அபிப்பிராயம்'' என்று பிரதமர் புறக்கணித்துவிட்டார். சட்டத்தில் அதைச் சேர்ப்பது சாத்தியமல்ல என்றும் சொல்லிவிட்டார். ஏன் சாத்தியமில்லை என்பது ஒருவருக்கும் புரியவில்லை. பிரதமரே புறக்கணித்தால்

ஆட்சி மொழியாக ஹிந்தி எவ்விதம் செய்யப்பட்டது என்பதை யாரும் அதிகார பூர்வமாக இதுவரையில் சொல்லக் காணோம். ஒரு வோட்டு வித்தியாசத்தில் — அதுவும் தலைவர் காலஞ்சென்ற டாக்டர் ராஜேந்திரப் பிரசாதின் வோட்டுப் பெற்று — ஹிந்தி ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகளைப் பார்த்தால் மொழி பற்றிய ஷரத்து, பேச்சுக்கள் எப்படி இருந்தாலும் வோட்டு எடுப்பில், ஏறக்குறைய ஏகமனதாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவே தெரிகிறது. 1955ம் ஆண்டு வெளியிடப்பட்ட ''மொழிவாரி ராஜ்யங்கள் பற்றிய சில சிந்தனைகள்'' என்ற புத்தகத்தில் டாக்டர் அம்பேத்கார் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் நடந்த முன்னிலையில் ரகசியமாகச் சொல்லப்பட்ட விவரங்களை வெளியிட்டதற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, நமது அரசியல் சட்டத்தின் மொழி பற்றிய 15வது ஷரத்தைப் பற்றிப் பின்வருமாறு சொல்லுகிறார்:



"இந்த ஷரத்துக்கு இருந்ததைப் போல் எதிர்ப்பு வேறு எந்த ஷரத்துக்கும் இல்லை. எந்த ஷரத்தும் இதைப் போல் உணர்ச்சி வேகங் களைத் தூண்டிவிடவில்லை. நீண்ட நேர விவாதத்துக்குப் பின் வோட்டுக்கு விடப்பட்டபோது, இதற்குச் சாதகமாக 78 வோட்டு களும் பாதகமாக 78 வோட்டுகளும் போடப்பட்டன. இந்தச் சம நிலையை எப்படிக் குலைப்பது? நீண்ட நேரத்துக்குப் பின்னர் கட்சிக் கூட்டத்துக்கு இப் பிரச்சினையை விட்டபோது ஹிந்திக்குச் சாதகமாக 78 வோட்டுக்களும், எதிராக 77 வோட்டுக்களும் கிடைத்தன. ஆக, 'ஹிந்தி' ஒரு வோட்டு அதிகம் பெற்றுத் தேசிய மொழியாக வெற்றி பெற்றுவிட்டது."




மேலும், இப்பிரச்சினை சிக்கல் மிகுந்தது. காரசாரமான வாத விவா தங்களும் கடுமையான பேரப் பேச்சுகளும் அரசியல் சட்டசபையில் விவாதிக்கப்படுவதற்கு முன்னமே அமோகமாக நடைபெற்றது என்பது டாக்டர் ராஜேந்திர பிரசாத் 1949 செப்டம்பர் 12ந் தேதி நிகழ்த்திய உரையிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. இந்தப் பிரச்சினை மிகவும் கஷ்ட மானது. எப்படி இதை அணுக வேண்டும் என்பது பற்றி அவர் கூறுகிறார்:

"மொழி பற்றிய எந்த விதமான தீர்மானத்தையும் நாம் செய் தாலும் அதை நாட்டு மக்கள் எல்லோரும் நிறைவேற்றி வைக்கவேண் டும் என்பதை மறந்துவிட வேண்டாம். நடைமுறையில், செயலில் நாள்தோறும் மணிதோறும், ஏன், நிமிஷந்தோறும் செயல்படுத்த வேண்டிய அம்சம் இந்த அரசியல் சட்டத்திலேயே இந்த ஷரத்தைப் போல் மற்றொன்று இல்லை. ஆகையால் இச் சபையில் வாதத்தில் வெற்றியடைந்து விட்டால் மட்டும் வெற்றியாகாது. உங்களுடைய தீர்மானம் நாடு முழுதும் ஒப்புக்கொள்ளக்கூடியதாக இருத்தல் வேண் டும். பெரும்பான்மை மெஜாரிட்டி பலத்துடன் ஒரு விஷயம் இச்சபை யில் நிறைவேறிவிட்டாலும் அதை நிறைவேற்றி வைப்பதில் மக்களின் பெரும்பகுதி — வடக்கிலோ தெற்கிலோ — அதை எதிர்ப்பார்களே யானால் அதை அமுல் நடத்துவது மிகவும் கஷ்டமாகப் போகும்."

**நேருஜியே சொன்னார்:**

இது நிகழ்ந்த மறுநாள் பிரதமர் நேருஜி ஆங்கிலத்தின் முக்கியத்து வத்தைக் குறித்துக் கீழ்க்கண்டவாறு பேசினார்:

"பிரிட்டிஷார் நம் நாட்டுக்கு வந்தபோது இருந்ததை விட ஆங்கிலம் இப்போது அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகி விட்டது. சர்வ தேச மொழிக்கு ஏறக்குறைய பூரண தகுதி வாய்ந்ததாக அது இருக்கிறது. இதில் சந்தேகமே இல்லை. சர்வதேச மொழியாக (அதிகார பூர்வமாக) இல்லாவிட்டாலும் கூட உலகத்திலேயே இம்மொழிதான் மிகவும் அதிக மாகப் பேசப்படுவதுடன் பரவலாக வியாபித்திருக்கிறது. உலக மக்க ளுடன் நாம் தொடர்பு கொள்ள வேண்டுமானால் — தொடர்பு கொள்ளத் தான் வேண்டும் — அந்நிய மொழிகளைப் பயிலாமல் எப்படி இருப்பது?

நம்மில் பெரும்பான்மையினர் வேறு அந்நிய மொழிகளைக் கற்றிருக்கலாம்.... எனினும், உபயோகத்தையும் சௌகரியத்தையும் கருத்தில் கொண்டு பார்த்தால் நமக்கு ஆங்கிலம்தான் எல்லா வற்றைக் காட்டிலும் மிகவும் முக்கியமானது. இதை நாம் நன்றாகவே உணர்கிறோம். நமக்குத் தெரிந்ததைப் பயன்படுத்திக் கொள்ளாமல் இருப்பதோ, அதை மறந்துவிடப் பார்ப்பதோ அறிவீனமாகும். ஆனால் அது இரண்டாவது மொழியாகத்தான் இருக்க வேண்டும். அதுவும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மட்டுமே."



மூன்றாவது நாள் இப்பிரச்சினையின் மற்றொரு முக்கியமான அம்சத்தைப் பற்றி மௌலானா அபுல்கலாம் ஆஸாத் குறிப்பிட்டார். நாட்டின் ஒற்றுமை யில் ஆங்கிலத்தின் பங்கு என்பதைக் குறித்துப் பேசுகையில், "மொழி சம்பந்தமாகப் பேசும்போது வடக்கும் தெற்கும் இரண்டு தனிப் பகுதிகள் என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். வடக்கும் தெற்கும் ஒன்றாக இணைந் திருப்பது ஆங்கிலத்தின் மூலமாகவே. இப்போது நாம் ஆங்கிலத்தைக் கைவிட்டுவிட்டால் வடக்குக்கும் தெற்குக்கும் உள்ள மொழித் தொடர்பு அற்றுப் போகும். ஹிந்தி மொழியைத் தேசிய மொழியாகச் செய்வதற்கு நீண்ட காலத்துக்குத் தெற்கின் ஒத்துழைப்பு இன்றியமையாதது" என்று சொன்னார்.

மற்ற நாடுகளைப் போல் இந்தியாவுக்கும் தனக்கென ஒரு தேசிய மொழி இருக்க வேண்டும். ஆங்கில மொழி ஆங்கிலேயர் ஆட்சியுடன் மறைந்துவிட வேண்டும் என்ற தேசிய உணர்ச்சியில் தேசிய மொழிகள் பற்றிய அரசியல் சட்டத்தின் 17வது பகுதி அங்கீகரிக்கப்பட்டது என்று

கருதலாம். ஆனால் ஆண்டுகள் செல்லச் செல்ல, ஹிந்தி ஆட்சியாளர்கள் ஹிந்தி மொழி தேசிய மொழியாக ஆகிவிட்ட மாதிரியே எண்ணித் தபால் கார்டு, மணியார்டர் இதழ்கள் இவற்றை ஹிந்தியில் அச்சடித்தும் மற்றும் இவை போன்ற நடவடிக்கைகளை எடுக்கும் அதிகாரம் செலுத்தத் தொடங்கியதும் ஹிந்தி பேசாத மக்கள் விழிப்படைந்து உண்மை நிலைமையை உணரத் தொடங்கி விட்டார்கள். ஹிந்தியைத் திருப்திகரமான ஒரு நவீன மொழியாகச் செய்வதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகளின் அநுபவம் நவீன காலத் தேவைகளுக்கு ஹிந்தி மொழியின் குறைபாடுகள் எவ்வளவு என்பதையும், அதை வளப்படுத்துவது எவ்வளவு சிக்கலானது, கஷ்டமானது என்பதையும் விளக்கி வைத்தது. ஹிந்தி 1965ல் ஆட்சி மொழியாக ஆன பின்னரும் நீண்ட காலத்துக்கு ஆங்கிலத்தின் அவசியம் தேவைப்படும் என்பதையும் ஆரம்பத்திலேயே அரசாங்கம் உணர்ந்திருக்கிறது என்பது அரசியல் சட்டத்தின் 210,348 ஷரத்துக்களிலிருந்து தெரிகிறது. 1950ம் ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட ''சமரசத் தீர்வு'' அவசரமாகச் செய்யப்பட்டது என்பது இப்போது தெளிவாகவே தெரிகிறது. தவிரவும், போட்டிப் பரீட்சைகளுக்கு (Competitive Examinations) ஹிந்தியே மொழியாக இருக்க வேண்டும் என்பது போன்ற நடவடிக்கைகளினால் ஹிந்தி மக்களுக்கு, ஹிந்தி பேசாத மக்களுக்குப் பாதகமாகச் சலுகை காட்டப்படுகிறது என்பதைப் பலர் உணர்ந்து கொள்வார்கள். இம்மாதிரி வேகமாக ஹிந்தி திணிக்கப்படுவதை எதிர்க்கத் தலைப்பட்டுள்ளனர். எனவே, மொழிப் பற்றுடன் தினசரி விவகாரங்களில் தீங்கிழைக்கப் படுகிறது என்ற உணர்ச்சி எதிர்ப்பைப் பலப்படுத்துகிறது.

ஹிந்தி அதிகாரம்



இப்போது உருவாகியுள்ள நிலைமையில் இப்பிரச்னைக்கு நியாயமாகவும் நிரந்தரமாகவும் தீர்வு காண வேண்டுமானால் இரண்டு முறைகளில் ஏதாவது ஒன்றை மேற்கொள்ள வேண்டும். முதலாவது, அரசியல் சட்டத்தின் 17வது பகுதியில் வரையறை செய்யப்பட்டுள்ள காலவரம்புகள் பயனற்றுப் போய்விட்டன என்று ஒப்புக் கொண்டு, ஹிந்தி பேசாத மக்களுக்குப் பிரதமர் நேரு அளித்த வாக்குறுதிகளை ஊர்ஜிதம் செய்யும் வகையில் இந்தப் பதினேழாவது பகுதியை அடியோடு ரத்து செய்ய வேண்டும்; வருங்காலம் தன்னைக் காத்துக் கொள்ளும் என்று ஆங்கிலத்தை இப்போதுள்ளபடியே நீடிக்கச் செய்யவேண்டும். இரண்டாவது, ஹிந்தி பேசும் மக்கள், ஹிந்தித் திணிப்புக்கு மற்றவர்களிடையே எழுந்துள்ள உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுத்து, ஹிந்தியை ஆங்கிலத்துடன் போட்டியிடும் அளவுக்கு உண்மையாகவே வளப்படுத்தி, அதை ஆட்சி மொழியாக அங்கீகரிக்கும் அளவுக்குக் காத்திருந்து செயல்பட வேண்டும்.

ரத்து செய்க!

# மொழிப் பிரச்சினையா? சாதிப் பிரச்சினையா!

ஜி. கே. சுந்தரம்



**திரு ஜி. கே. சுந்தரம் கோவைத் தொழிலதிபர். சிறந்த நிர்வாகத்திறனுக்கும், தொழில் துறை நேர்மைக்கும் புகழ் பெற்றவர். சுதந்திரக் கட்சியைச் சேர்ந்தவர் என்றாலும் ஆட்சிமொழி விஷயம் கட்சியின் முக்கிய கொள்கைகளில் சேராததாகையால், தமது அநுபவம் மூலம் கண்டறிந்த உண்மைகளைச் சொந்தக் கருத்தாக எடுத்துச் சொல்லுகிறார். எப்படிச் சொன்னாலும் உண்மை ஜ்வலிக்கத்தான் செய்கிறது.**

மக்களின் ஆட்சி மொழியாக ஹிந்தி இரண்டு வழிகளில் திணிக்கப்படுகிறது. நேரடியாகச் சட்டபூர்வமாகவும் மறைமுகமாக மிரட்டல், பிரசாரம், சர்க்கார் அதிகாரிகளின் கெடுபிடி ஆகியவற்றின் மூலமாகவும் மக்கள் ஹிந்தியைப் படித்தாக வேண்டிய கட்டாய நிலைமை உண்டாக்கப்படுகிறது.



சுமார் இருநூறு ஆண்டு காலமாக இந்நாட்டின் ஆட்சி மொழி ஆங்கிலமேயாகும். இப்போது ஹிந்தியை ஆட்சி மொழியாக்குவதனால் மக்களுக்கு ஏற்படக் கூடிய நன்மை என்ன? ஆங்கிலத்துக்குப் பதிலாக ஹிந்தியை ஆட்சி மொழியாகக் கொள்ள வேண்டும் என்பதற்குக் கூறப்படுகிற ஒரே காரணம், ஆங்கிலம் அந்நிய மொழி என்பதாகும். ஆனால்

இது அர்த்தமற்ற வாதம். சுமார் இருநூறு வருஷ காலமாக நம் மக்கள் ஆங்கில மொழியை நன்கு பயின்று ஆங்கிலம் இந்திய மொழிகளில் ஒன்றாகக் கருதப்படக் கூடிய நிலைமையில் இந்தியாவில் வேரூன்றிவிட்டது.

**வேரூன்றிய மொழி**

ஆங்கில மொழி ஆங்கிலேயர்களால் மட்டும் பேசப்படுகிற ஒன்றல்ல. அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, இலங்கையிலும் அது வழக்கில் இருந்து வருகிறது. ஆங்கில மொழி பிரிட்டனில் ஒரு விதமாகவும், அமெரிக்காவில் இன்னொரு விதமாகவும் இந்தியாவில் வேறொரு விதமாகவும் அந்த அந்த நாட்டுக்கே இயல்பான ஒரு சாயலைப் பெற்றுக்கொண்டிருக்கிறது. ஆகவே, இந்திய ஆங்கிலம் இந்தியாவுக்கே உரித்தான இந்திய மொழிகளில் ஒன்றாகும் என்று துணிந்து கூறலாம். இந்தியாவில் உள்ள 14 இந்திய மொழிகளைப் போலவே ஆங்கிலமும் ஒரு முக்கியமான இந்திய மொழியாகக் கருதப்பட வேண்டும்.

பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவித்துச் சுதந்திரம் பெற வேண்டும் என்ற இயக்கம் வளர வளர, பிரிட்டிஷாரின் நடை, உடை, பாவனை, கலாசாரம், மொழி அத்தனை மீதும் இந்தியர்களுக்கு உள்ள மோகத்தைப் போக்க வேண்டியது அவசியமாகவும் அர்த்தமுள்ளதாகவும் இருந்தது. ஆனால் சுதந்திரம் அடைந்த பிறகு, பிரிட்டிஷார் மீது நாம் கொண்டிருந்த வெறுப்பைப் படிப்படியாக மறந்து, அவர்களுடன் காமன்வெல்த் உறவு மூலம் புதிய முறையில் நட்புக் கொண்டுவிட்டோம். இப்போது பிரிட்டிஷ் துணிகளைக் கொளுத்துகிறோமா? அல்லவே! ஆங்கிலேயருடன் இந்தியாவுக்குள்ள உறவு நாளுக்கு நாள் அதிகரிப்பது மட்டுமின்றி ஆங்கிலம் பேசும் மற்ற நாடுகளுடனும் இந்தியா நெருக்கமான உறவைப் பெற்றிருக்கிறது. சமீபத்தில் சீனரின் ஆக்கிரமிப்பு ஏற்பட்ட போது ஆங்கிலம் பேசும் நாடுகளே முன்னதாக நம் உதவிக்கு வந்தன. இந்தியாவுக்கு அரசியல் சட்டத்தை நிர்ணயித்த போது, பிரிட்டிஷ் ஆட்சி மீது ஏற்பட்டிருந்த வெறுப்பு நம்மை விட்டு முற்றிலும் நீங்கவில்லை. உணர்ச்சி வசப்பட்டு, ஆங்கில மொழியையும் இந்நாட்டிலிருந்து அடியோடு ஒழித்துக் கட்ட வேண்டும் என்ற ஆவேச எண்ணத்துடன் இந்திய மொழிகளில் ஒன்றை ஆட்சி மொழியாக்குவதென்று முடிவு செய்தோம். ஹிந்தி அதிகப்படியான இந்தியர்களால் பேசப்படுகிறதென்று கூறி, அதையே ஆட்சி மொழியாக்குவதென்றும் அவசரத்தில் எண்ணினோம்.

**வளர்க்கலாம், திணிக்கலாமா?**

இப்போதுங்கூட, ஹிந்தி தானாகவே வளர்ந்து, யாதொரு நிர்ப்பந்தமும் இல்லாதபடி மக்களிடையே புழக்கத்துக்கும் வழக்கத்துக்கும் வருவதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. அது அப்படி வளருவதாயிருந்தால் அதை யாராலும் தடுத்து நிறுத்தவும் முடியாது. உண்மையில் யாரும் தத்தம் தாய் மொழியுடன் பிற மொழிகளைக் கற்றுக்கொள்வது நல்லதும் பயனளிப்பதும் ஆகும். இந்த எண்ணத்துடனேயே கோயமுத்தூரில் ஹிந்திப் பிரசார சபைக்குத் தலைமை வகித்து வருகிறேன். ஆனால் மக்களிடையே ஒரு மொழி பரிசயம் பெறுவதும், வளருவதும் வேறு; அதைக் கட்டாயமாக்கி, ஆட்சி மொழியாகத் திணிப்பது வேறு.

தாய் மொழியைத் தவிர வேறு எந்த மொழியாக இருந்தாலும், அது அவரவர் சம்பந்தப்பட்ட மட்டில் அந்நிய மொழியேயாகும். ஹிந்தி பேசுபவர்கள் வட இந்தியாவில் பல ராஜ்யங்களில் பரவிக் கிடக்கிறார்களென்றால், ஆங்கிலம் பேசுகிறவர்கள் இந்தியாவிலுள்ள எல்லா ராஜ்யங்களிலும் பரவிக் கிடக்கிறார்கள் என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஹிந்தியைப் புதிதாகப் படித்துப் பலனடைவதை விட ஆங்கிலத்தைப் புதிதாகப் படிப்பதனால் விஞ்ஞானம், தொழில், இலக்கியம், சர்வதேசத் தொடர்பு எல்லாவற்றிலும் அதிகப் பலன் அடையலாம் என்று கருதுவதைத் தவறு என்று கூற முடியாது.

ஹிந்தி சுலபமாகக் கற்றுக்கொள்ளக்கூடிய ஒரு மொழி என்பதும் கட்டுக் கதை. எப்படியே ஓரளவு படித்த மக்களுக்குத்தான் ஹிந்தி கற்றுக்கொள்வது சுலபமாக இருக்கும். படித்தவர்களுக்கு எந்த அந்நிய மொழிகளைக் கற்பதும் எளிதுதான். ஹிந்திக்கு விசேஷ எளிமை எதுவும் கிடையாது. ஆகையால்தான் பஞ்சாப், வங்காளம், தென்னாடு முழுவதிலுமுள்ள மாநிலங்கள் ஹிந்தித் திணிப்பை எதிர்க்கின்றன. இந்தியா முழுவதிலும் பெயருள்ள சர்வ கலாசாலைகளின் துணை வேந்தர்கள், தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள் சங்கங்கள், செகண்டரி ஆசிரியர்கள் சங்கங்கள், பெற்றோர் சங்கங்கள் முதலியனவும், ஏராளமான படித்த மக்களும் ஹிந்தி ஆட்சி மொழியாக்கப்படுவதை வெறுக்கிறார்கள்.



சென்ற இருநூறு ஆண்டு காலமாக ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக நாம் பயன்படுத்தி வருகிறோம். இதில் எந்த விதமான கெடுதலும் ஏற்படவில்லை. அனுபவத்தில் நடைமுறையில் உள்ள இந்த அனுகூலத்தை



# ஒரு சில லோமா துளிகள் நரை மயிரை

## தவிர்க்க உங்களுக்கு உதவுகிறது

'லோமா'வைத் தவருமல் தினந்தோறும் ஒரிரு தடவை உபயோகியுங்கள். நரை மயிர் மறையும் அடையாளங்களையும், அவற்றிற்குப் பதிலாகக் கண்கவர் கருமையான கேசம் இளமைப் பொலிவுடன் விளங்குவதையும் காண்பீர்கள்.




கேசத்தைக் கருமையாக்குவது மட்டுமல்ல, கேசத்திற்கு ஓர் போஷாக்கும் கூட!

ஏகபோக ஏஜெண்டுகள் &
ஏற்றுமதியாளர்கள்:
எம். எம். கம்பாத்வாலா,
அஹமதாபாத்-1. (இந்தியா)

ஏஜெண்டுகள்:
ஸி. நரோத்தம் & கோ., பம்பாய்-2.

TAM

ஸ்டாக்கிஸ்டுகள் : மெஸர்ஸ் [illegible] & கம்பெனி, 60, [illegible], மதராஸ்-1

நாம் ஏன் யாதொரு காரணமுமில்லாமல் இழக்க வேண்டும்? இந்திய சுதந்திரப் போராட்டங்களுக்கு வேண்டிய ஒற்றுமை உணர்ச்சியையும் தேச பக்தியையும் ஆரம்பத்தில் ஆங்கில மொழி மூலமாகத்தான் நாம் விதைத்தோம். ஹிந்தியைப் பொது மொழியாக்கிக் கொண்டு அதன் மூலம் இந்தியர்களிடையே ஐக்கிய உணர்ச்சியை ஊட்டவில்லை. ஆங்கில மொழி மூலமாகத்தான் இந்தியா ஒன்று என்ற அரசியல் உணர்ச்சியைப் பரப்பினோம். அதன் பிறகு அந்தந்தப் பிராந்தியத்திலுள்ள மக்களிடையே பிரதேச மொழி மூலம் ஒற்றுமையைப் பரப்ப முடிந்தது. ஆகையால், ஐக்கிய உணர்ச்சியை ஏற்படுத்த ஹிந்தி அவசியம் என்று சொல்வது அர்த்தமற்ற பேச்சு. இதனால் இந்தியாவில் ஐக்கிய உணர்ச்சி ஏற்படுவதற்குப் பதிலாகப் பல விபரீதமான அனர்த்தங்கள்தான் மூளும் என்பது என் கருத்து. முக்கியமாக ஹிந்தி பேசாத ராஜ்யங்களில் உள்ளவர்கள் சர்க்கார் உத்தியோகம் பெறுவதிலும், பதவி உயர்வுகளைப் பெறுவதிலும் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். ஆங்கிலத்திலும் ஹிந்தி அல்லாத வேறு பிராந்திய மொழியிலும் ஒருவர் எவ்வளவுதான் தேர்ச்சி பெற்றிருந்தாலும், ஹிந்தி பேசும் ராஜ்யத்தைச் சேர்ந்த சாதாரண கல்வியறிவுள்ளவர் அவரைவிட அதிக வாய்ப்புடையவராகவே இருப்பார். இந்தப் பேராபத்து ஹிந்தி பேசாத ராஜ்யங்களிலுள்ள படித்த மக்களுக்கு இப்போது உண்டாகியுள்ளது. நம் எதிர்கால சந்ததியினருக்கு நல்வாழ்வு பெறச் சந்தர்ப்பம் கிடைக்காதபடி இப்போதே அவர்களை ஈன ஜாதியினராக ஆக்கி வைக்கிறோம். ஹிந்தி ஜாதி — ஹிந்தி அல்லாத ஜாதி என்று மேல் ஜாதி-கீழ் ஜாதி முறைகளை ஏற்படுத்துவதுதான் இந்த ஆட்சி மொழிச் சட்டத்தின் விளைவாக முடியும்.

அர்த்தமற்ற பேச்சு....

ஆட்சி மொழியை ஹிந்தியாக மாற்ற வேண்டிய அவசியமே இல்லாத போது அதை நெருக்கடி காலத்தில் சட்டமாக்க வேண்டிய அவ்வளவு அவசரம் என்ன என்பது சற்றும் புலப்படவில்லை. மொழி, மெட்ரிக் முறை இவையெல்லாம் இந்தச் சீன ஆக்கிரமிப்புச் சமயத்தில் முக்கியமானவையல்ல. மாறுதல் எதையாவது செய்து கொண்டிருக்க வேண்டுமென்ற மனப்பான்மையுடன் பழைய பாரம்பரியங்களும் கலாசாரங்களும் பண்புகளும் நாசமாக்கப்படுகின்றன. கம்யூனிஸத்துக்கான அடிப்படைகளை இவை உருவாக்கிவிடுமோ என்று அஞ்சத்தக்க நிலைமை ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஏற்கனவே கல்வித் துறையில் உள்ள குழப்பம் போதாதென்று ஹிந்திக் குளறுபடியும் புதிதாக முளைக்க வேண்டியதில்லை. இந்தப் புது மாறுதல்கள் எதுவுமின்றி ஆங்கிலம் ஆட்சி மொழியாக நீடித்து நிலவுவதில் நன்மையே தவிர கேடு வராது என்பதே என் கருத்து.



## ஆட்சி மொழி — கருத்தரங்கு

**தென்னாட்டின் எதிர்கால வாழ்வு தாழ்வுகளை நிர்ணயிக்கும் ஆட்சி மொழிப் பிரச்னை பற்றிய கருத்தரங்கு கல்கி ஜூன் 23ந் தேதி இதழிலிருந்து நடைபெற்று வருகிறது. பிரபல அரசியல் தலைவர்களும், சிந்தனையாளர்களும், கல்வித்துறை நிபுணர்களும், கலைஞர்களும், சமூக வாழ்வில் முக்கியத்துவம் வாய்ந்தவர்களும் பங்கு பெறும் இக் கருத்தரங்கில் இனி எழுத இருப்பவர்கள்:**

ராஜா ஸர் முத்தையா செட்டியார், ஸர் பி. டி. ராஜன், திரு சி. என். அண்ணாதுரை, திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர், தமிழகம் திரு சுப்பையா, திரு எல். கிருஷ்ணசாமி பாரதி, திரு கருமுத்து தியாகராஜ செட்டியார், திரு ஏ. என். பரசுராம், திரு நெடுஞ்செழியன், திரு கே. வி. சூரியநாராயண அய்யர், ஜனாப் பஷீர் அஹமத் சயீத் திரு என். முருகேச முதலியார், திரு எம். ஜி. ராமச்சந்திரன்

# ஏழு வைட்டமின்கள் சேர்ந்தது, அமுல் பாலுணவு - அவை செய்வது என்னென்ன?

**வைட்டமின் ஏ**

தோலை மிருதுவாக வைத்துக்கொள்கிறது. கண்களை பிரகாசமாக்குகிறது; வளர்ச்சிக்கு உதவுகிறது.



**வைட்டமின் பி1**

நரம்புகளை உறுதிப் படுத்துகிறது; மார்பில் உள்ள தசைநார்களைப் பலப்படுத்துகிறது.



**வைட்டமின் பி2**

வாயின் ஆரோக்கியத் திற்கு இது அவசியம்.





**வைட்டமின் பி6**

தசை நார்கள் இளைப்பாறிக்கொள்ள உதவுகிறது.

**வைட்டமின் சி**

நோய் பரவாமலும், சொறி பிடிக்காமலும் தடுத்து நிறுத்துகிறது.





**வைட்டமின் டி**

எலும்புகளைப் பலப்படுத் துகிறது; பற்களை நல்ல முறையில் வைத்திருக் கிறது. பல ரோகங்களை யும் தடுக்கிறது.

**நியசினமைடு**

ஜீரணத்தை எளிதாக்கு கிறது. நரம்புகளை உறு திப்படுத்துகிறது; தோலை ஆரோக்கியமுடன் வைத்திருக்கிறது.



அமுல் பாலுணவில் 7 வைட்டமின்கள் சேர்ந்திருப்பதோடு சம அளவில் புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ் சத்துக்களும் கலந்துள்ளன. அமுல் சிறப்புவாய்ந்த உணவின் மதிப்பைப் பெற்றிருப்பதால் இக்காலத் தாய்மார்கள் இதையே தேர்ந்தெடுக்கிறார்கள். உங்கள் குழந்தைக்கு இது மிகச் சிறந்தது.

**அமுல்** பாலுணவில் உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள் உள்ளன.

























ASP/AMF-38 TAM

# அப்பருக்கு ஓர் ஆலயம்

திருநாவுக்கரசர் நம் தமிழ் நாட்டில் தோன்றியருளிய சான்றோர்கள் பலரும், தலைசிறந்த ஒருவர். ஒப்புயர்வற்ற மெய்ஞ்ஞானப் பெருஞ் செல்வர். இறையருள் பெற்று நிறை நலம் சான்ற தவ நெறிச் செம்மல்! "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று வீர முழக்கம் செய்த வித்தகர்! திருத்தொண்டின் நெறி வளர்ந்தோங்கத் திருவவதாரம் செய்தருளிய ஞானத் தவ முனிவர்! சிறந்த அருட்பெருந் தொண்டர். மொழிக்கு மொழி தித்திப்பாக அமைந்து கனிவு முதிர்ந்து இலகும் செந்தமிழியலிசைக் கருவூலம் ஆகிய தேவாரம் என்னும் தெய்வத் தமிழ்ப் பாடல்களை அருளிச் செய்தவர்!

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருநாவுக்கரசு சுவாமிகள் தென்னார்க்காடு மாவட்டத்தில், பண்ருட்டிக்கு அருகில் மேற்கே ஐந்து கல் தொலைவில் உள்ள திருவாமூர் என்னும் தலத்தில் சைவ வேளாளர் குலத்தில் குறுக்கையர் குடியில், புகழனார் என்னும் தந்தைக்கும் மாதினியார் என்னும் தாயாருக்கும் அருந்தவ மைந்தராகத் திலகவதியார் என்னும் தமக்கையாருக்குப் பின் தோன்றியருளினார். இவருக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர் மருள்நீக்கியார் (அஞ்ஞானத்தை நீக்குபவர்) என்பது. 'பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால்' இவருக்குச் சிவபெருமான் 'திருநாவுக்கரசர்' என்னும் திருப்பெயரை வழங்கினார். திருஞான சம்பந்தர் இவரை அப்பர் என்று மிகவும் அன்புடன் அழைத்துப் போற்றினார். அதனால் இவருக்கு அப்பர் சுவாமி என்ற பெயர் ஏற்படலாயிற்று.

திருநாவுக்கரசர் மகேந்திர வர்மன் (கி. பி. 600–630) நரசிம்மவர்மன் (கி. பி. 630–668) என்னும் புகழோங்கிய பல்லவ மன்னர்களின் காலத்தில் வாழ்ந்தவர். மகேந்திரவர்மன் பெரு வீரன். காவியம் ஓவியம் முதலிய பல கலைகளில் வல்லவன். "மத்த விலாசப் பிரகசனம்" என்னும் வடமொழி நாடக நூலை எழுதியவன். இம் மகேந்திர வர்மனது அரசவையிலேயே, திருநாவுக்கரசர் தம் இளமைப் பருவத்தில் தருமசேனர் என்னும் பட்டம் பெற்றுச் சமண சமயத் தலைவராக விளங்கியிருந்தார். பிறகு இறைவன் அருளால், இவர் தமது குலத்துக்கும் குடிக்கும் பழமையாக உரிய சிவநெறிக்கே தமது தமக்கையார் ஆகிய திலகவதியார் செய்தருளிய தவ முயற்சியால் வந்து சேரப் பெற்றார். அதன் பயனாக மகேந்திரவர்ம பல்லவ மன்னனும் மனமாற்றம் அடைந்து சிவநெறி சேர்ந்தான். இவ்வாற்றால், தமிழகத்தில் திருநாவுக்கரசரால் ஒரு பெரிய சமயப் புரட்சி — சமுதாயப் புரட்சி — அரசியல் புரட்சியே நடைபெற்றது எனலாம்.



இத்தனைப் பெருஞ் சிறப்பு வாய்ந்த திருநாவுக்கரசர் பெருமானை நாம் அவர் பெருமை உணர்ந்து போற்றாதிருத்தல் முறையோ?

திருஞான சம்பந்தருக்கு அவர் அவதரித்த தலமாகிய சீகாழியில் ஸ்ரீ பிரமபுரீசுவரர் கோயிலில் ஒரு தனிக்கோயில் அமைந்துள்ளது. ஆனால் திருநாவுக்கரசரின் அவதாரத் தலமாகிய திருவாமூரில், திருநாவுக்கரசருக்கு ஒரு நினைவுச் சின்னமாகக் கோயில் ஒன்று இல்லாதது நெடுங்காலமாக ஒரு பெருங் குறையாக இருந்து வந்தது.

ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான்

திருவாமூர் தமிழகத்தில் நடுநாட்டைச் சேர்ந்தது. தொண்டை மண்டலத்துக்கும் சோழ நாட்டுக்கும் நடுவே அமைந்திருப்பது நடு நாடு. இது சேதி நாடு, திருமுனைப் பாடி நாடு என்னும் இரு பிரிவுகளை உடையது. மலையமான் திருமுடிக்காரி என்னும் சங்ககால வள்ளல் வாழ்ந்த திருக்கோவலூர் நடு நாட்டின் தலைநகரமாகும். திருவாமூர் திருமுனைப் பாடி நாட்டில் உள்ளது. முனையரையர் என்னும் வீரப் பெருமக்கள் வாழ்ந்து வந்தமை பற்றி இதற்கு இப்பெயர் வந்தது. (முனையரையர்-பாடி) திருமுனைப்பாடி நாட்டில்தான்





சைவ சமய ஆசிரியர்களாகிய திருநாவுக்கரசரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தோன்றியருளினர்.

"அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானால் நம்மளவோ
பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும்
சீர்ப்பாடு"

எனச் சேக்கிழார் சுவாமிகள் இந்நாட்டைப் புகழ்ந்து போற்றுகிறார். இதன்கண் உள்ள

திருவாமூர் திருநாவுக்கரசர் தோன்றிய சிறப்பினும் சிவநெறியை உலகெங்கும் பரப்பிய சிறப்பைப் பெற்றுத் திகழ்கின்றது.

இத்தகைய திருவாமூரில் திருநாவுக்கரசருக்கு ஒரு கோயில் இப்போது அமைக்கப் பட்டுள்ளது. திருநாவுக்கரசர் தோன்றியருளிய இல்லம் இருந்த இடத்திலேயே கோயில் அமைந்துள்ளது.

திருநாவுக்கரசர் கோயில் அமைந்துள்ள மனையில், மிகவும் புராதனமான களிவாகை என்னும் ஒரு மரம் பரந்து அடர்ந்த நிலையில் வளர்ந்து விளங்குகின்றது. இப்புராதன மரம் திருக்கோயிலுக்குத் தல விருட்சம் போல் அமைந்துள்ளது. இம்மரத்தின் பட்டைகளும், இலைகளும் விஷக் கடிக்கும் காத்துக்கும் கைகண்ட மருந்தாகப் பயன் படுகின்றன.

திருவாமூரில் மிகவும் புராதனமான சிவன் கோயில் ஒன்றும் உள்ளது. அது சிதைவாக இருப்பினும் அழகோடு உள்ளது. இக்கோயிலுக்கு முதற்குலோத்துங்கன் திருப்பணி செய்துள்ளான். சுவாமி பெயர் பசுபதீசுவரர். அம்பிகையின் பெயர் திரிபுரசுந்தரி. அருக்கு சான முறையில் உள்ளது இக்கோயில். இங்குள்ள தல விருட்சமாகிய கொன்றை மரம் ஆண்டு முழுதும் பூக்கும் சிறப்புடையது. இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவாமூரில் திருநாவுக்கரசருக்குக் கோயில் எழுப்பப்பட்டுக் கும்பாபிஷேகமும் நடைபெறுவதன் மூலமாகத் திருநாவுக்கரசருக்குக் கோயில் இல்லாக் குறை தீர்கிறது.


"GOKUL"
SANTOL
TOILET POWDER

# பொன் விலங்கு

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

'காலை நடையினிலே உன்தன் காதல் தெரியுதடி' என்ற கவிதைத் தொடரிலே 'காலநடை' என்ற பதச் சேர்க்கையை இணைத்துப் புனைந்ததற்காக மகா கவி பாரதியாரைப் பலமுறை மனத்தில் நினைத்து நினைத்துக் கொண்டாடியிருக்கிறான் சத்தியமூர்த்தி. அன்று அதிகாலையில் மோகினியின் ஞாபகத்தை அடியொற்றினாற் போல் இந்தக் கவித் தொடரும் நினைவு வந்தது அவனுக்கு. காப்பி குடிப்பதற்காகச் சிற்றுண்டிச் சாலைக்குள் நுழைந்தது, காப்பி குடித்து விட்டுத் திரும்பியது எல்லாமே தன் நினைவோ, ஞாபகமோ இல்லாமல் மிகமிக அவசரமாக நடந்து விட்டவை போல் தோன்றின. அப்போது அவனுடைய ஞாபகத்தின் பரப்பை எல்லாம் மோகினி ஒருத்தியே முழுமையாக ஆண்டு கொண்டிருந்ததனால் காரியமாகச் செய்து கொண்டிருந்த எதுவும் நினைவாக ஞாபகத்தில் நிற்கவில்லை. காப்பி குடித்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தவன் வழியில் அங்கங்கே தனித் தனியாகவும், இருவர், மூவர் இணைந்த கூட்டமாகவும், சந்தித்த மாணவர்களின் வணக்கங்களையும், மலர்ந்த முகங்களையும் பார்த்துப் பதிலுக்கு இயந்திரம்போல் வணங்கி விட்டு மேலே நடந்து



மணிவண்ணன்

கொண்டிருந்தான். அன்று அதிகாலையில் மல்லிகைப்பந்தல் நகரம் அழகு மயமாக இருந்தது. பன்னீர் தெளிப்பது போல் சாரல் விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்த சூழ்நிலையில் 'கூலிங் கிளாஸ்' அணிந்துகொள்ளாமலிருக்கும் போதே 'கூலிங்




கிளாஸி'ல் தெரிவதைப் போல் ஊர் குளிர்ச்சியாகவும் பசுமையாகவும் இருந்தது. நான்கு பக்கமும் கருநீல மேகங்கள் கற்றை

கற்றையாகச் சுருட்டிக் கொண்டு மலைமுகடுகளில் வந்து சரிந்து விடப் போவது போல் தொங்கிக் கொண்டிருந்தன. இயல்பாகவே எழில் வாய்ந்த நகரமான மல்லிகைப் பந்தலில் இப்படி மனமுக்கோப்பான நாளாகவும் வேறு இருந்து விட்டால் கிராமாந்தரத்துக் கலியாண வீட்டைப் போல் விடுபடாதனவும், புரிபடாதனவுமாகிய மகிழ்ச்சிகள் நிரம்பி யிருக்கும். மலைச் சாரலில் 'கால்ப்' பந்தாட்டத்துக்கான புல்வெளிப் பரப்பெல்லாம் மரகதப் பசுமை மின்னிக்கொண்டிருந்தது. புல்வெளிப் பசுமையில் மின்னும் பனித் துளிகளும் நடுநடுவே 'கால்ப்' பந்தாட்டத்துக்காக வெண் மணல் பரப்பிய சின்னஞ்சிறு வட்டங்களும் அருகே தெரிகிற காட்சியைப் பார்த்துக் கொண்டே நடந்த சத்தியமூர்த்தி அறைக்குப் போவதற்காக மாடிப்படி ஏறுமுன் சாலையில் காரைக் கொண்டு வந்து நிறுத்திவிட்டுக் கீழே இறங்கி வந்துகொண்டிருந்த பாரதியைச் சந்திக்க நேர்ந்தது. தவிர்க்க முடியாமலும் பார்க்காதது போல் விலகிப் போய்விட முடியாமலும் மிக அருகில் நேர்ந்து விட்டது அந்தச் சந்திப்பு. அந்தக் கல்லூரியின் வம்பு பேசும் மனிதர்களையும், பொருமை நிறைந்த சூழ்நிலையையும் புரிந்து கொண்டு பாரதி தன்னைத் தேடி வருவதையும் அடிக்கடி அவளோடு சந்தித்துப் பேச விரும்புவதையும் குறைத்துக்கொள்ளும்படி அவளிடமே இரண்டொரு முறை குறிப்பாகச் சொல்லி யிருந்தான் சத்தியமூர்த்தி. இன்றும் தேடி வந்திருப்பதிலிருந்து அவள் தான் கூறியதைச் சரியாக விளங்கிக் கொள்ள வில்லை என்றே அவனுக்குத் தோன்றியது. கைநிறைய இனிப்பு மிட்டாயை வைத்துக் கொண்டே அதற்காக அழுகிற குழந்தையிடம் ஒன்றுமில்லை யென்று சொல்லி ஏமாற்றுவது போல் அவள் தன்னைத் தான் தேடி வந்திருக்கிறாள் என்பதைத் தெரிந்துகொண்டே யாரோ யாரையோ தேடி வந்திருப்பது போல் பாராமுகமாகப் போய்விட முடியவில்லை அவனால். 'நீ இன்னும் இப்படி என்னைத் தேடி வரலாமா?' என்று கண்டிப்பது போல் அவளைக் கடுமையாக நிமிர்ந்து பார்த்துவிட்டுத் தயங்கி நின்றான் சத்தியமூர்த்தி. அவளோ அவன் முகத்தை எதிரிட்டுப் பார்ப்பதற்கே பயந்து நடுங்கினாள். நாவும் அழகிய உதடுகளும் எவ்வளவு வேகமாகப் பேசத் துடித்துக் கொண்டிருந்தனவோ, அவ்வளவு வேகமாக ஒத்துழைக்காத சொற்களுடன் அவனிடம் பேசினாள் அவள்:

''அன்று மாலை ஏரிக் கரையில் 'போட் கிளப்' அருகே புல்வெளியில் நீங்கள் மாணவர்களோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும்போது நான் அருகே வந்து அழைத்ததை நீங்கள் சிறிதும் விரும்பாதது போல் கடுமையாக நடந்துகொண்டீர்கள். அன்று அப்படி உங்கள் சுவாரஸ்யமான பேச்சின் நடுவே குறுக்கிட்டுத் தொல்லை கொடுத்துவிட்டதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்! என்னைப் போன்றவர்கள் அன்பின் மிகுதியினாலேயே சில சமயங்களில் தவறு செய்துவிடுகிறோம்'' என்று அவள் தளர்ந்த சொற்களால் நிறுத்தி நிறுத்திக் கூறியபோது சத்தியமூர்த்திக்கு அவளிடம் என்ன மறுமொழி கூறுவதென்றே தெரியவில்லை. அந்த நிகழ்ச்சி அவள் மனத்தை இவ்வளவு ஆழமாகப் புண்படுத்தி வைத்திருக்குமென்று அவன் எதிர்பார்க்காததனால் முதலில் சிறிது மருண்டான். மறுபடியும் அவன் அவளுடைய முகத்தை நிமிர்ந்து பார்த்தபோது அந்தக் கவர்ச்சி வாய்ந்த கண்களில் நீர் முட்டிக் கொண்டிருந்தது. அவளே மறுபடியும் பேசலானாள்:

''இப்போதுகூட நான் உங்களைத் தேடித்தான் இங்கே வந்திருக்கிறேனோ என்றெண்ணிக் கொண்டு என் மேல் நீங்கள் கோபப்படலாம். இன்று அப்பாவின் விருந்தாளிகளாக ஜரிஷ்காரத் தொழிலதிபர்கள் இருவர் வீட்டில் வந்து தங்கியிருக்கிறார்கள். வீட்டை அலங்கரிப்பதற்காகக் கொஞ்சம் 'பூக்கள் வாங்கிக் கொண்டு போகலாம்' என்று தான் இங்கே வந்தேன்'' என்று கூறி 'ராயல் பேக்கரிக்கு அருகிலிருந்த 'பிளவர்ஸ் கார்னர்' என்னும் கடையைச் சுட்டிக் காண்பித்தாள் பாரதி. அந்தக் கடையில் மேஜைகளிலும், அலங்காரக் கூடங்களிலும் கண்ணாடிக் குடுவைகளில் சொருகி அழகுபடுத்தும் நவநாகரிக மலர்கள் மட்டுமே வியாபாரம். விதம் விதமான நிறங்களில் வகை வகையான உருவங்களில் வாசனையில்லாதனவாய்ப் பார்க்க மட்டும் அழகுடைய பூக்களை அடுக்கி வைத்துக் கொண்டு விற்று முதலாக்க மல்லிகைப்பந்தலில் முடியும். அந்த அலங்காரப் பூக்கள் விற்கும் கடை காலை ஏழு மணியிலிருந்து பத்து மணிவரை மட்டும்தான் திறந்திருக்கும். அந்த மூன்று மணி நேரத்துக்குள் அங்கே ஐம்பதிலிருந்து நூறு ரூபாய் வரை வியாபாரம் ஆகிவிடுமென்று சத்தியமூர்த்தி கேள்விப்பட்டிருந்தான். தரைப் பகுதி ஊர்களான நாட்டுப்புறத்து நகரங்களில்

உற்சாகமளிக்கும் குளுமையான புத்துணர்ச்சியை அனுபவிக்க

# தினமும் கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீமினால் சவரம் செய்துகொள்ளுங்கள்!




அந்த அதிகாரி போன்ற, கம்பீரமான தோற்றம்... அதற்கு உறுதுணையாயிருப்பது கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீம். ஏனெனில், கால்கேட் மென்தால் சேர்க்கப்பட்டுள்ளதால், அது [illegible] குளுமையான க்ரீம் போன்ற [illegible] சுத்தமான [illegible] சவரத்தைப் பெற சருமத்தை பதமாகும் தாடியை மிருதுவாயும் ஆக்குகிறது. நீங்கள் எப்பதும் கண்டிராத, உற்சாகமளிக்கும், குளுமையான புத்துணர்ச்சியுடன் கூடிய சவரத்தை அளிப்பது கால்கேட் ஒன்றுதான்!




மிக சிக்கனமானது! கால்கேட் ஷேவ் ஸ்டிக் சவரத்திற்கு, [illegible] பிரபலமானது.

---

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யக்கிரதம் பலக்கிரதம்

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.,
மதராஸ்-17

இப்படி ஒரு மணமில்லாத பூக்கடையை நானெல்லாம் திறந்து வைத்துக்கொண்டிருந்தாலும் கால் காசுக்கு வியாபாரம் ஆகாது. ஜமீன்தார்களும் சம்ஸ்தானாதிபதிகளும், தொழிலதிபர்களும், கோடைக்கால வாசத்துக்காகப் பெரிய பெரிய பங்களாக்களைக் கட்டி வைத்திருக்கும் மல்லிகைப்பந்தலிலோ ஒவ்வொரு பங்களாவுக்கும் பத்துப் பதினைந்து ரூபாய்க்குக் குறையாமல் அலங்கரிப்பதற்கு இந்த மணமில்லாப் பூக்களை வாங்குவார்கள். விடியற்காலையில் ஏழு மணியிலிருந்து பூக்களெல்லாம் தீர்ந்துபோய் 'பிளவர்ஸ் கார்னரின்' கடையை இழுத்து மூடுகிறவரை அங்கே வரிசையாகக் கார்கள் வந்த வண்ணமாகவே இருக்கும். பார்வைக்கு மட்டுமே அழகான அந்த மணமில்லாப் பூக்களை வாங்கிச் செல்வதற்கு மனிதர்கள் போட்டி போட்டுக்கொண்டு வருவதைப் பார்த்து, வாழ்க்கையின் எந்தப் பகுதியிலிருந்தும் வறுமையின் நலிந்த குரல்களே ஒலிக்காத அந்த ஊரின் செழிப்பைச் சத்தியமூர்த்தி வியந்திருக்கிறான். பூபதியின் வீட்டுத் தோட்டத்திலேயே ஏராளமான மலர்கள் இருக்கும்போது, பாரதி 'பிளவர்ஸ் கார்னரில்' கவர்ச்சிப் பூக்கள் வாங்கவென்று அப்போது அங்கே வந்ததாகக் கூறியதை அவனால் நம்ப முடியவில்லை. அதை ஒரு காரியமாக வைத்துக் கொண்டே வேறெதற்காகவோ அவள் அப்போது அங்கே வந்திருப்பதாகத் தோன்றியது. அவள் சொல்லிய காரணத்தைத் தான் நம்பவில்லை என்பது தெரிய மெல்லச் சிரித்தான் அவன்.

''என்ன அப்படிச் சிரிக்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லை! இந்த ஊரில் உள்ள அத்தனை வீடுகளையும் அலங்கரிக்கப் போதுமான அவ்வளவு பூக்கள் உங்கள் தோட்டத்திலேயே இருக்கும்போது, நீங்கள் 'பிளவர்ஸ் கார்னரை'த் தேடிக்கொண்டு பூ வாங்க வந்ததாகக் கூறுகிறீர்களே; அதை நினைத்துத்தான் சிரித்தேன்.''

சிறிது நேரம் அவனுக்கு என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் திகைத்துத் தடுமாறிய பின் அவள் மெல்ல மெல்லத் தன்னைச் சமாளித்துக்கொண்டு பேசினாள்:

''இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது சார்? மேஜைகளில் உள்ள மலர்க் குடுவைகளில் அப்படியே கொண்டு போய்ச் சொருகிவிடுவதற்கு வசதியாக 'மேட்ச்' ஆகிற நிறங்களில் பொருத்தமான பூக்களைச் சேர்த்துக் கட்டித் தயாராக வைத்திருக்கிறார்கள் இங்கே. வீட்டுத் தோட்டத்தில் நாமாகப் பறித்துச் சேர்த்து அலங்கரிக்க முயன்றால் இதுவே ஒரு பெரிய வேலையாகி விடுகிறது. அப்புறம் படிப்பதற்குநேரமே இருப்பதில்லை. நீங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கிற கவர்ச்சியில் மயங்கித் 'தமிழ் குரூப்'பில் வேறு சேர்ந்தாயிற்று. தண்டியலங்காரத்தையும் புறப்பொருள் வெண்பா மாலையையும் நினைத்தாலே பயமாயிருக்கிறது. அன்றன்றைக்கு நடக்கிற பாடலை அன்றே மனப் பாடம் பண்ணிவிடுகிறேன். பாடல்களிலோ அவற்றின் பொருளிலோ ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால்கூட உங்களைத் தேடிவந்து கேட்டுத் தெரிந்துகொள்ளப் பயப்பட வேண்டியிருக்கிறது. என்னிடம் நீங்கள் ஏன்தான் இவ்வளவு கடுமையாயிருக்கிறீர்களோ, தெரியவில்லை?'' என்று அவள் கூறிய பதிலிலிருந்தே அவள் கண்டிப்பாகப் பூ வாங்குவதற்காக மட்டும் அங்கு வரவில்லை என்பதை அவன் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிந்தது.




''பிளவர்ஸ் கார்னரில் பூ வாங்குவதற்காகத்தானே வந்தீர்கள்? அப்படியானால் கடையில் பூக்கள் தீர்ந்து போவதற்கு முன்னால் போய் வாங்கிக்கொண்டு புறப்படுங்கள்....'' என்று இருந்தாற் போலிருந்து அவசரமாகவும் அவளைப் புண்படுத்துகிற முறையிலும் பேச்சைத் திடீரென்று முறித்துக் கொண்டு மேலே போக முயன்றான் சத்தியமூர்த்தி. மல்லிகைப் பந்தல் கல்லூரியில் ஆசிரியராக வந்து சேர்ந்த மறு நாளிலிருந்து அந்தப் பெண் பாரதியிடம் அவன் 'இனிமேல் இவளிடம் தீர்மானமாக இப்படித்தான் பழக வேண்டும்' என்று முடிவு செய்து கொள்ளக் காரணமான சில நிகழ்ச்சிகள் அடுக்கடுக்கு நடந்திருந்தன. இரண்டாவது முறையாகத் தனக்குள் நினைத்துப் பார்க்கவும் அருவருப்பான அந்த நிகழ்ச்சிகளைத் திரும்பத் திரும்ப எண்ணி வருந்திக் கொண்டிருப்பதைவிட ஒரேயடியாகத் தன்னைத் தானே மாற்றிக் கொண்டு விடுவது என்று மாறியிருந்தான் அவன். தன்

லைப் போலி எல்லா மாணவர்களையும் கவர முடிந்த ஓர் இளம் பருவத்து ஆசிரியனைக் கல்லூரி அதிபரின் மகளான பாரதி சுற்றிச் சுற்றி வருவதையும், மதிப்பதையும், புகழ்வதையும், மலர்ந்த முகத்தோடு எதிர் நின்று வணங்குவதையும், மற்றவர்கள் எப்படிப் புரிந்து கொள்ள முடியும் என்று அந்தச் சில நிகழ்ச்சிகளிலிருந்து அவன் தெரிந்து கொண்டிருந்தான். முதன் முதலாக அங்கு வேலை ஒப்புக் கொள்வதற்கு முந்திய நாள் இரவு அவன் அந்த ஊர் பஸ் நிலையத்தில் வந்து இறங்கிப் பெட்டி படுக்கையோடு தங்க இடமின்றித் தவித்த போது, பாரதி காரில் வந்து அழைத்துப் போய்க் கல்லூரியில் அவன் தங்குவதற்கு இடம் ஏற்பாடு செய்து கொடுத்தாளே; அதைப் பற்றியே கல்லூரி முதல்வரும் ஹெட்கிளார்க்கும் இல்லாத வம்புகளை யெல்லாம் பரப்பியிருந்தார்கள். அவன் எப்படி யாரால் அங்கே அழைக்கப் பெற்று வந்து தங்கச் செய்யப்பட்டான் என்பதை அறிந்து மறு நாள் காலை அவர்கள் 'ஒரு தினுசாக'ச் சிரித்துக் கொண்டே பேசியது கூட அவனை வேதனைக்குள்ளாக்கி யிருந்தது. அவன் செவிகளில் கேட்காதென நினைத்து அன்று முதல்வரும் ஹெட்கிளார்க்கும் தங்களுக்குள் பேசிக் கொண்டு போன உரையாடலையும் அவன் அரைகுறையாகக் கேட்டு மனம் வெந்து போயிருந்தான்.

''மனிதன் 'இண்டர்வ்யூ' நடத்துகிற மாதிரியா நடத்தினாரு? வீட்டிலே கூப்பிட்டு வைத்துக் கொண்டு மகளையே தேநீர் கலந்து கொண்டு வரச் சொல்லி—விருந்து—உபசாரமெல்லாம் பண்ணிச் 'சுயம்வரம்' நடத்தற மாதிரி நடத்தினார். பையன் அப்பாவும் மகளும் சேர்ந்து இரசிக்கிறாப்பிலே நல்ல காதல் கவிதையாத் தேடிப் பிடிச்சுப் பாடம் நடத்தினான். உடனே 'ஆகா ஊகூ'ன்னு எல்லாரையும் வசக்கிட்டே தலைமேலே தூக்கிப் பேசிக்கொண்டாடுறாரு... இனிமேல் மகள் அதுக்கு மேலே கொண்டாடுவா போலிருக்கு... அவன் இந்த ஊரிலே காலை வைக்கிறதுக்கு முன்னாலே காரிலே போய்த் தேடி அழைச்சிட்டு வந்து தங்க ஏற்பாடெல்லாம் பிரமாதமாகப் பண்ணிக் கொடுத்திருக்கா.... உமக்கும் எனக்கும் நடக்குமா ஐயா இந்த உபசாரம்...?''—இப்படிப் பேசியது கல்லூரி முதல்வர். இதைக் கேட்டு விட்டு, ''பார்க்கலாம்! பார்க்கலாம்! இதெல்லாம் எங்கே போய் நிற்குதுன்னு பார்க்கலாமே?...'' என்று பதில் கூறியவர் ஹெட்கிளார்க்.

தனக்குத் தானே இரண்டாம் தடவையாக மறுபடி நினைத்துப் பார்க்கவும் விரும்பாத இந்தப் பழைய உரையாடலைச் சத்தியமூர்த்தி இன்னும் மறந்து போய் விடவில்லை. யாரையும் இலட்சியம் செய்யாமல் வந்த தினத்தன்று காலையிலேயே அவன் சொந்தமாகத் தங்குவதற்கு அறை தேடிக் கொண்டு போனதற்கு இதுவும் ஒரு காரணம். வேறொரு நாள் இதே விதமான வம்பு ஒன்றைப் பூபதியின் வீட்டுத் தோட்டத்தில் நடந்த விருந்தின் முடிவில் மீண்டும் அவனே தன் செவிகளால் கூச்சத்தோடு கேட்டுக் கொண்டு போக நேர்ந்தது.

''பையன் கெட்டிக்காரர்கள் மயங்க மயங்கப் பிரமாதமாப் பேசறான். அப்பா வாயாலே புகழ்ந்து கொண்டாடுகிறார். மகளோ கையாலேயே கொண்டாடுகிறாள். எழுந்திருந்து ஓடி வந்து அவனுடைய கிண்ணத்திலே தேநீர் ஊற்றிய காட்சியைப் பார்த்தீரோ இல்லையோ?'' என்று அன்றைய விருந்துக் கூட்டம் முடிந்து போகும் போது வயது முதிர்ந்தும் மனம் முதிராத பேராசிரியர் ஒருவர் இன்னொருவரிடம் அரட்டைப் பேச்சாகப் பேசிக் கொண்டு போனார். சத்தியமூர்த்திக்கு வேதனை ஒரு புறமும், சிரிப்பு ஒரு புறமுமாக இருந்தன. கல்லூரி எல்லையில் காளிலிங்கனார் 'வருளாம் வருளாம்' என்று சிவன் வருளாம்பிகையைச் சுற்றிச் சுற்றி வருவதையோ வருளாம்பிகை அடிக்கடி 'சந்தேகம் கேட்பதாக'க் காளிலிங்கனாரைச் சுற்றி வருவதையோ இங்கு யாரும் ஒரு வம்பாகப் பேசுவதில்லை. 'குழந்தைத் தன்மையும் பேதைமையும்' மாறாத பூபதியின் பெண் என் மேல் அக்கறை காட்டுவது இத்தனை பெரிய வம்புக்குரிய தவறு? அன்பைச் சம்பாதிப்பதில் கூட அப்படிச் சம்பாதிக்கிறவன் மேல் மற்றவர்கள் பொறாமைப்படுவதற்கு இடம் இருக்கிறது போலும்! 'மற்றவர்கள் பொறாமைப்படுகிற விதமான பேரன்பைச் சம்பாதிக்கிறவன் அதனால் சொந்த மனத்தில் நிம்மதியிழந்து தவிக்க வேண்டும் என்பதுதான் உலக நியதியா என்ன?' என்று மிக அந்தரங்கமாக எண்ணி எண்ணி வியாமோகங்களில் மனம் குமைந்திருக்கிறான் சத்தியமூர்த்தி. வெளிப்படத் தெரியாத அல்லது தெரிய விடாத இத்தனை மனப் போராட்டங்களுக்கும் பிறகுதான் அவன் பாரதியிடம் பழகுகிற பழக்கமே மாறியது. ஆனால் பாரதி அவனுடைய மாற்றத்துக்கு இவ்வளவு நிர்ப்பந்தமான காரணமும் இருக்கும் என்பதைக் கூடப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. அவன்




**ARUNAGIRI VILAS SOAP-NUT POWDER. KARAIKUDI.**

# மலச்சிக்கலை குணப்படுத்த

## வாக்குலாக்ஸ்

ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்




புதிய முறையில் அபிவிருத்தி செய்யப்பட்ட வாக்குலாக்ஸ் உங்கள் ஜீரணப்பாதைகளை நன்கு சுத்தம் செய்கிறது...மலச்சிக்கலால் ஏற்படும் சக்திக்குறைவையும் பித்தத்தன்மையையும் போக்குகிறது. வாக்குலாக்ஸ் உங்கள் இரத்தத்தை சுத்தப்படுத்துகிறது—உங்கள் சருமத்தை, பருக்களிலிருந்தும் களங்கங்களிலிருந்தும் பாதுகாக்கிறது. வாக்குலாக்ஸ் குடும்பம் முழுமைக்கும் சிறந்தது.

**வாக்குலாக்ஸ்**

இனிக்கும் மலமிளக்கி-பேதி மருந்து

# இப்பொழுது...



வாரம் 2 முறை போயிங் சர்வீஸ்

## மதராஸிலிருந்து சிங்கப்பூருக்கும்

அங்கிருந்து

## ஜாகர்த்தாவுக்கும் மற்றும்

## ஸிட்னிக்கும்!




விமான சர்வீஸ் நடத்துவதில் 30 வருஷங்களுக்கு மேற்பட்ட அனுபவம்

**ஏயர்-இந்தியா** பி.ஓ.ஏ.ஸி. மற்றும் கண்டாஸ் ஒத்துழைப்புடன்

தேசப்பாதுகாப்புக்கு சேமியுங்கள்!

ஒரு காரணமும் இல்லாமலே ஏதோ ஒரு வகை வெறுப்புடன் தன்னிடம் கடுமையாக மாறிக் கொண்டு வருவதாகத் தான் தோன்றியது அவனுக்கு. அவன் அவ்வளவு வேகமாகப் பேச்சை முறித்துக் கொண்டு மாடிப் படியேறி மேலே போய்விட முயன்றும் கூட அவள் அவனைப் போக விடாமல் பேசிக் கொண்டு நின்றாள். தான் பூக்கடைக்காக வந்திருப்பதையே அவள் மறந்துபோய் விட்டாற் போலிருந்தது.

''நான் இந்த ஆண்டில் 'தமிழ் குரூப்' எடுக்க வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டதற்குக் காரணமே சொல்லிக் கொடுப்பதற்கு நல்ல ஆசிரியராக நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்பது தான். அப்பாவும் என்னை உங்களிடம் தமிழில் நிறையக் கேட்டுத் தெரிந்து கொள்ளச் சொல்லியிருக்கிறார். 'இன்டர்வ்யூ'வுக்கு வந்திருந்த போது நீங்கள் விளக்கிச் சொல்லிய அந்தத் தமிழ்ப் பாட்டைக் கேட்டுத்தான் நானும் அப்பாவும் உங்களிடம் மனத்தைப் பறிகொடுத்தோம். அதற்குப் பின்னால் நீங்கள் வகுப்பில் நடத்திய 'ஷீ வாக்ஸ் இன் ப்யூட்டி' பாடலைக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். அப்பாவும் அதைக் கேட்டிருக்கிறார். அன்று மாலை வீட்டில் அதைப் பற்றி என்னிடம் அப்பா புகழ்ந்து சொல்லிக் கொண்டிருந்தார்'' என்று அவள் பேசிய பேச்சின் தொனியிலிருந்து 'இவ்வளவு பிரியமாயிருக்கிற என்னை நீங்கள் இன்னும் எதற்காகச் சோதிக்கிறீர்கள்?' என அவனிடம் கேட்பது போலிருந்தது. தன் செவியில் விழுந்திருந்த அந்த இரண்டு வம்புப் பேச்சுக்களையும் அப்போதே அவளிடம் தெளிவாகக் கூறித் தன் நிலையை விளக்கி விடலாமா என்று எண்ணினான் சத்தியமூர்த்தி. அப்படி விளக்குவதனால் உலகத்தின் களங்கம் நிறைந்த சிந்தனையின் ஒரு பகுதியை அவள் புரிந்து கொண்டு வேதனைப்பட நேருமே என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான். அந்த வேதனை தன்னோடு போகட்டுமே என்று அவன் தன்னைத் தானே அடக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. ஏற்கெனவே குறிப்பாக அவளிடம் எச்சரித்திருந்த எச்சரிக்கையை இன்னும் வற்புறுத்தி இப்போது கூறலானான்:

''என்னைப் போன்ற ஆசிரியர்கள் எல்லா மாணவ மாணவிகளுக்கும் பொதுவானவர்கள். எங்களுடைய பாசமும், உரிமையும் அன்பும், எங்களிடம் படிக்கிற அத்தனை பேருக்கும் பாரபட்சம் இல்லாமல் பொதுவானவை. எங்களுடைய சமூகப் பொறுப்பு எப்போதும் பரந்த நோக்கமுடையதாகவே அமைக்கப்பட்டிருக்கிறது. உங்களைப் போல் கல்லூரி நிர்வாகியின் மகள் மட்டுமே அடிக்கடி என்னைத் தேடி வந்து கொண்டிருந்தாலோ, மேலே உள்ளவர்களைத் தன்னைக்கட்டிக்கொள்வதற்காக நான் உங்களுக்கு மட்டும் அதிக சிரத்தையோடு சொல்லிக் கொடுக்கிறேன் என்றும், மற்ற மாணவர்களைக் கவனிப்பதில்லை என்றும் எனக்குக்கெட்ட பெயர் வரும். என்னிடம் மட்டுமே இவ்வளவு மதிப்பும் ஆர்வமும் காண்பித்து விட்டு மற்ற ஆசிரியர்களைக் கவனிக்காதது போல் இருந்தால் உங்களுக்கும் அதனால் கெட்ட பெயர் வரும்.....''

''தாராளமாக வரட்டுமே? உங்களை மதிப்பதனால் வருகிற கெட்ட பேர் எவ்வளவு பெரிதாயிருந்தாலும் நான் அதைத் தாங்கிக் கொள்வதற்குத் தயார். சிறந்த ஆசிரியர் என்ற முறையில் என்னைப் போல் ஒரு மாணவி உங்களை மதிப்பதோ உங்களிடம் ஆர்வம் காண்பிப்பதோ எப்படிப்பிழையாகும்?'' என்று ஆத்திரமாகவும் தைரியமாகவும் அப்போது அவனை எதிர்த்துக் கேட்டாள் பாரதி. அவளுடைய அறியாமையையும் வெகுளித் தனத்தையும் பார்த்துச் சத்தியமூர்த்தி சிரித்தான்.

''உங்கள் கேள்வி நியாயமானது! ஆனால் பிழையாகவே நினைத்துப் பிழையாகவே அநுமானமும் செய்து பிழையாகப் பேசுகிறவர்கள் பத்துப்பேர் ஒன்று சேர்ந்தால் சொர்க்கத்தைக் கூட நரகமாக மாற்றி விடலாம். அதைத் தெரிந்து கொண்டு ஒருவருக் கொருவர் அளவாகப் பழகவேண்டும். சுருக்கமாக

மனைவி (கணவனிடம்): தினம் பொழுது விடிந்தால் பொழுது போனால் நாம் இருவரும் இப்படிச் சண்டை போட்டுக் கொண்டிருப்பது துளிக் கூட நன்றாக இல்லை.



கணவன்: வாஸ்தவம் தான்! அதற்கு என்னை என்ன செய்யச் சொல்றே?

மனைவி: அதனால் நாம் இருவரும் இன்றைக்கு ஒரு முடிவுக்கு வருவோம். நீங்கள் உங்கள் தவறை ஒப்புக் கொண்டு விடுங்கள். நான் மன்னித்து விடுகிறேன்.

''நேற்று நீ பார்த்தாயே அந்த நாடகம் சந்தோஷமாக முடிகிறது என்று சொன்னாயே! அது 'டிராமா'யில் அல்லவா முடிகிறது?''

''அது சரி தான். நாடகம் பார்க்க வந்தவர்கள் எல்லோரும் அது முடிந்ததே என்று எவ்வளவு சந்தோஷப் பட்டார்கள் தெரியுமா?''



ஒன்று சொல்வேன். நீங்கள் நினைப்பது போல் மென்மையாகப் பழகவே தெரியாத அளவு நான் கடுமையானவன் இல்லை. நம்முடைய சமூகப் பொறுப்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் சில இடங்களில் நாம் மலரவோ, சிரிக்கவோகூட முடியாமல் போய்விடுகிறது.'' — இதைக் கூறி விட்டு அவளிடம் விடைபெற்றுக் கொண்டு மாடிப்படி ஏறிய போது தான் சொல்ல வேண்டியதை மிக நாசூக்காகச் சொல்லி விட்டதாக நினைத்துக்கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. இண்டர்வ்யூவுக்கு வந்து திரும்பிய போதும், அவனுடைய கடிதங்கள் மதுரையில் தனக்குக் கிடைத்த போதும், மல்லிகைப் பந்தலுக்குத் தான் வந்து சேர்ந்த முதல் தினத்தன்று அவளே தன் அறையைத் தேடிக் காப்பி எடுத்துக் கொண்டு வந்த போதும், அவளைப் பற்றி அவன் மனத்தில் இருந்த சிறிதளவு நளின நினைவுகள் கூட இப்போது அறவே வற்றிப் போயிருந்தன. 'எல்லாரையும் போல அவளும் ஒரு மாணவி' என்பதைத் தவிர வேறெந்த எண்ணமும் அவனுக்கு இப்போது இல்லை. ஆனால் அவளோ பார்த்த முதல் விநாடியிலிருந்து அவனிடம் எத்தனை தவிப்பும் ஆர்வமும் கொண்டிருந்தாளோ அத்தனை தவிப்புடனும், ஆர்வத்துடனுமே இன்னும் அவனைத் தேடி வந்து கொண்டிருந்தாள். அவ்வளவு விரைவாக அவன் அப்போது தன் பேச்சை முடித்துக் கொண்டு மாடிக்குப் போனதுகூட அவன் தன்னைப் புறக்கணித்து விட்டுப் போவதாகத் தான் அவளுக்குத் தோன்றியிருக்கும். எப்படித் தோன்றியிருந்தாலும் சத்தியமூர்த்தி அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. மேலே மாடிக்கு வந்து அறைக் கதவைத் திறந்து விட்டு ஏதோ பழைய புத்தகம் ஒன்றைத் தேடி எடுப்பதற்காகப் பெட்டியைக் குடையத் தொடங்கியிருந்த அவனுடைய கையில் அதன் ஒரு மூலையில் கிடந்த பாரதியின் கடிதங்கள் இரண்டும் அகப்பட்டன. அவற்றைக் கையில் வைத்துக் கொண்டு ஒருகணம் ஏதோ நினைத்துத் தயங்கியவன் அடுத்த கணம் மனம் மாறியவனாக அவற்றின் துணுக்குகள் அடையாளமே தெரியாதவையாய் மிக மிகச் சிறியவையாகி விடும்படி விரல்களின் பிடியில் மேலே கிழிக்கவும் முடியாமல் தடுமாறுகிற அளவு மாற்றி மாற்றிக் கிழித்தான். பெட்டியின் மற்றொரு மூலையில், மோகினியின் பென்சில் எழுத்துக் கடிதமும் கிடப்பது தெரிந்தது. ஒரு விநாடி 'அதையும் கிழித்தால் என்ன?' என்று நினைத்து அடுத்தவிநாடி அப்படிச்செய்ய விடாமல் ஏதோ ஒரு ஞாபகம் இடைப்பட்டுத் தடுத்ததனால் அந்த ஒரே ஒரு கடிதத்தை மட்டும் தனது பெட்டியில் வைத்தான்.

பாரதியின் கடிதங்களைக் கிழித்த துணுக்குகளை அப்படியே அறையில் குவித்து விட்டுப் புத்தகத்தைத் தேடும் வேலையைத் தொடர்ந்தபோது அறை வாசலில் நிழல் தட்டியது. திரும்பினால் மறுபடியும் அந்தப் பெண் பாரதி வந்து நின்று கொண்டிருந்தாள். அவள் கையில், 'பிளவர்ஸ் கார்னரி'ல் வாங்கிய அலங்காரப் பூக்கள் நிறைந்திருந்தன. ''இந்த அறையில் நடுவாக ஒரு வட்ட மேஜையைப் போட்டுப் பொன் நிறக் கண்ணாடிக் கூஜா ஒன்றையும் வைத்து நீர் நிறைத்து நான் கொண்டு வந்திருக்கிற மலர்களில் சிலவற்றால் அலங்கரிக்க வேண்டும் போல ஆசையாயிருக்கு'' என்று உற்சாகமாகச் சிரித்துக்கொண்டே கூறியபடி அவள் அறைக்குள் நுழையவும் சத்தியமூர்த்தி சேரக் குவித்து வைத்திருந்த கிழிசல் கடிதத் துணுக்குகள் பலகணி வழியாக வீசிய காற்றில் மேலே எழும்பிப் பறக்கவும் சரியாயிருந்தது. பூக்களை ஒரு கையில் மாற்றிக் கொண்டு அறை முழுவதும் குப்பையாகச் சிதறி விட்ட அந்தக் காகிதத் துணுக்குகளைப் பொறுக்கிச் சுத்தம் செய்ய முந்திய பாரதி நாலைந்து துணுக்குகளைப் பொறுக்கியதுமே திகைத்துப் போய் நின்று விட்டாள். தன்னுடைய ஆசையின் சிதறல்களைத் தானே பொறுக்கி வெளியில் எறிய நேருவது ஒரு பெண்ணுக்கு எவ்வளவு பெரிய துர்ப்பாக்கியம்! அந்தத் துர்ப்பாக்கிய நிலையில் தான் பாரதியும் அப்போது இருந்தாள். சத்தியமூர்த்தியோ ஒன்றும் செய்யத் தோன்றாத நிலையில் அவள் முகத்தை அப்போது எதிரிட்டுப் பார்ப்பதற்கே கூசிப் போயிருந்தான். (தொடரும்)

# நைஸ் மாவா? ரவையா?

கிராமப்புறங்களில் நடக்கும் விநோதக் காட்சிகளில் ரைஸ் மில் காட்சியும் ஒன்று. அங்கு ஏற்படும் அனுபவங்களை ஹாஸ்ய ரஸம் ததும்பத் தருகிறார் எழுத்தாளர் மதி.

"இவ்விடம் நெல், மாவு, மிளகாய், சீயக்காய் முதலியவை சுத்தமாக அரைத்துக் கொடுக்கப்படும்" என்ற போர்டு தெரிகிறதா? இந்தப் போர்டு கண்ணுக்குத் தெரிவதற்குப் பத்து நிமிஷங்களுக்கு முன்னரே தனது "லொய்ங் — ஞொய்ங்" என்ற 'ஹுங்கார ரீங்கார'த்தாலும் சங்கீதம் பாடி வரவேற்கும் இடத்துக்குத்தான் இப்போது போய்க் கொண்டிருக்கிறோம். என்ன இது? ஏன் இருமுகிறீர்கள்? உங்கள் கண்களில் ஏன் தண்ணீர் வருகிறது? தும்மல்கூட வந்து விட்டதா? அடடே, புறப்படும்போது ஒன்றும் இல்லையே? இப்போது உடம்புக்கு என்ன? இந்த மில்லின் இரைச்சலில் நான் சொல்வது காதில் விழவில்லையா? உதட்டை அசைக்கிறீர்களே, ஒலி பெருக்கியில் கோளாறு ஏற்பட்ட சலனப்படம் போல? எல்லாம் இந்த மாவு மில்தான் காரணம். அவைதான் இப்படிப் பயங்கர 'இரைச்சல்' போட்டுக் கொண்டிருக்கின்றன.

"பருப்பு போட்டிருக்கிறேன்னு பார்த்தேன்....."

"ஏன்யா? ஒன்னே அரெச்சுக் குடுக்கச் சொன்னாங்களா? வீட்டுலே என்ன பட்சணம் பண்ணப் போறேன்னுகூடக் கேட்கச் சொன்னாங்களா?"

"கேட்டா என்னவாம்? அதுக்குத் தகுந்த மாதிரி அரெச்சித் தர்றேன்."

"ஆம்மாம், மாவு அரைக்கிறதிலே நிபுணரு. கம்பா அரைப்பியா சரித்தான்!" இப்படிக் கண்களால் சுழற்றிச் சொடுக்கிறாள்; அந்த மில் பையன் மாவுமாத்திரமா அரைத்துத் தருவான்?



"ஏம்மா? நைஸ் மாவா? ரவையா?" அரைப்பவர் என்னமோ இரைந்துதான் கேட்கிறார். அந்தப் பெண் என்ன சொல்கிறாள்? உதடுகள் அசைகின்றனவா? இல்லையா? சொல்வது புரியாத போது சற்று நெருங்கி வந்து கேட்க வேண்டியிருக்கிறது. ஐயையோ! இந்தப் பெண் ஏன் இப்படிப் பயந்து பாய்ந்து விட்டாள்? அந்தப் பையன் என்னவென்று கேட்கத்தானே அருகில் வந்து காதுகளைச் சாய்த்துக் கொண்டு கேட்கிறான். பாதி அரைத்திருப்பான். 'ஐயய்யோ, ரவைன்னு' அதே ஆரணங்குதான் அலறுகிறாள். பாவம், அந்த மில்காரன் என்ன செய்வான்? பாதி அரைத்தாயிற்று. ரவையாக இருந்தாலும் மீண்டும் அரைத்து மாவாக்கி விடலாம். மாவை எப்படி ரவையாக்குவது?

"என்னம்மா, நைஸ் மாவா? ரவையா?"

"எல்லாம் மாவுதான்...."

அந்த மங்கையிடம் கட்டிகைகள்' அவ தையும் அல்லவா செய்து விட்டு வந்துவி வான்? அப்படித்தான் ரத்தினமும் செ தான். பொன்னம்மாளின் கண்கள் இடு கட்டளைதான் அவனை அப்படிச் செய்துவி ஊக்கியிருக்க வேண்டும். பொன்னம்மாள தினசரி நெல்லை வேக வைத்துப் புழுங்க அரிசியாக்கி விற்றுப் பிழைத்து வரும் ஓ ஏழைப் பெண். ஆனால் அவள் அழகி. ரத் னம் பொன்னம்மாளின் இதயத்தில் இட பிடித்துக் கொண்டான். அவளுக்கும் தவ அரிசியுடன் ஊரார் அரிசியும் கொஞ்சம் சேர் துக் கிடைத்தது!

வேணுமானால் நிறுத்துக் காட்டறேன்'' என்று கூறுவார் மில்காரர். அதோடு, மிளகாய்த் தூளை எடை போட்டுக் காட்டி, ''நீங்கள் வாங்கிய சீட்டு பத்துப் பலத்துக்குத் தான். பொடி பத்துப் பலம் இருக்கிறது சரிதானே'' என்றால், ''அது எப்படிச் சரியாகும்? ஒரு படி அரிசி ஒன்றரைப்படி மாவாகும் என்று என் சம்சாரம் சொல்கிறாள். அப்படியிருக்க ஒரு வீசை மிளகாய் ஒன்றரை வீசைப் பொடியாக ஆகாமல் அப்படியே எப்படி இருக்கும்? நீ மிஷினுக்குள் நிறுத்தி வைத்துக் கொண்டிருக்கிறாய்!'' என்று சீறுவார். மனைவியைவிட மில்காரர் சொல்வது என்ன, அத்தனை நம்பகமானதா?




## மஹி

பாட்டி ஒருத்தி வந்தவுடன் 'அரைப் படி' என்று சொல்லிச் சீட்டு வாங்குவாள். சீட்டுக் கொடுப்பவர், ''எங்கே காட்டுங்கள்'' என்றால் வந்தது ஆபத்து. ''நான் போட வேடாப்பா! எங்க வீட்டுப் பொண்ணு போட்டிருக்கு. நானே அளந்து பார்க்கிறேன்'' என்று சொல்லி அளந்து பார்க்க ஆரம்பித்து விடுவாள். அரைப் படியை மாத்திரம் படியில் கொட்டி விட்டு மீதியைப் பாத்திரத்திலேயே நிறுத்திக் கொண்டு விடுவாள். ''தா இதுதான். ஒரு சிராங்காய் கூடப் போட்டிருக்கிறேன்!'' என்பாள். அந்தச் சிராங்காய் பட்டணம் படிக்குச் சற்றும் குறையாது.

''என்னப்பா மிளகாய்த் தூள் குறைகிறதே'' என்று சொல்லி ஒருவர் வருவார்.

''கண் பார்வைக்குக் குறைவாகத்தான் இருக்கும் ஐயா. எடை சரியாக இருக்கும்.

''கிர்ர்...கிர்ர்ச்...டப்டப், டமால் படார்...'' என்று திடீரென்று ஒரு சத்தம் வரும், மில்லில். மிகவும் கஷ்டப்பட்டு அச் சத்தத்தின் காரணமான பொருளை வெளியே எடுத்துப் பார்த்தால், உருத் தெரியாத ஓர் இரும்புத் துண்டு தட்டுப்படும். ''இரும்பைப் போட்டுக்கொண்டாந்துட்டியே. இத்தினி நேரம் மிஷின் ஓடிஞ்சிருக்குமே'' என்றும், ''நான் இரும்புக்கு எங்கேய்யா போவேன்? உன் மிஷினிலிருந்துதான் கழன்று விழுந்திருக்கும்'' என்பாள் அந்த அம்மாள். சற்றைக்கெல்லாம் திரும்பி ஓடி வருவாள் தன் சாவியைத் தேடி. அரிசிக்குள் புதைந்து மிஷினில் சிக்கிய அந்த உருத் தெரியாத இரும்புத் துண்டுதான் அவள் சாவி. ''என் சாவியை உடைச்சுப் பிட்டியேய்யா'' என்று அவள் அலறுவாள்!

மாவு மில்லில் இப்படி எத்தனை எத்தனையோ ரசமான நிகழ்ச்சிகள்!

# மவுண்ட் ரோடில் விளையாட்டு!



ஒவ்வொரு நாளும், விடுமுறை நாட்களைத் தவிர, மவுண்ட்ரோடு வழியாக மாலை நேரத்தில் வீடு திரும்பும் போது இந்த விளையாட்டைச் சிறிது நேரம் நின்று ரசித்து விட்டு வருவேன். அந்த நேரத்திலேதான் போக்குவரத்து நெரிசல் அதிகமாகி மூச்சுத் திணறும் மவுண்ட் ரோடு.

வாகனங்களைத் தாண்டிப் பாதசாரிகள் ஒரு பக்கத்திலிருந்து ரோடின் எதிர்ப் பக்கத்துக்குச் செல்ல ரோட்டின் குறுக்கே பட்டையாகக் கோடுகள் சில இடங்களில் காணப்படும்.

வெள்ளை உடுப்பு அணிந்த போக்குவரத்து போலீஸ்காரர்கள் இரண்டு பேர் ரோடுக்கு இரு பக்கங்களிலும் அந்தக் கோடு ஆரம்பமாகும் இடத்தில் பாதசாரிகளை நிறுத்தி வைத்துக் கொண்டிருப்பார்கள். கார்கள் முதலிய வாகனங்களின் ஊர்வலத்தைத் திடீரென்று தங்கள் கைதூக்கிய ஜாடை நிறுத்துவார்கள். வாகனங்கள் அப்படியே வெள்ளைக் கோட்டுக்கு இரு பக்கமும் நின்றுவிடும்.

மறுபடி ஒருமுறை போலீஸ்காரர்களின் 'விசில்' ஊதப்படும். உடனே பாதசாரிகள் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்துக்கு விரைந்து செல்வார்கள். இந்தப் பக்கம் இருக்கும் பாதசாரிகள் எதிர்ப் பக்கத்துக்கும், எதிர்ப் பக்கத்திலிருக்கும் பாதசாரிகள் இந்தப் பக்கத்துக்கும் குறுக்கே சென்று விரைந்து செல்வதைக் கண்டதும், பள்ளிக்கூடத்தில் டிரில் வாத்தியார் வகுப்பு நடத்தியது நினைவுக்கு வந்தது.

அப்போது ஒரு டிரில் வாத்தியார் சில மாதங்களே எங்கள் பள்ளியில் தேகப்பயிற்சி விளையாட்டுக்கள் முதலியவை சொல்லிக் கொடுக்க வந்தார். மாலை நேரத்தில் பிள்ளைகளை இரு வரிசையாகப் பிரித்து எதிரும் புதிருமாக நிற்கச் சொல்லுவார். பிறகு தமது சட்டைப்பையிலிருந்து ஒரு விசிலை எடுத்து ஊதுவார். "விசில் ஊதியதும், இந்தப் பக்கம் இருக்கும் பையன்கள் அந்தப் பக்கமும் அந்தப் பக்கம் இருக்கும் பையன்கள் இந்தப் பக்கமும் ஓடிவந்து விடவேண்டும். எந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் முன்னதாக எதிர்ப் பக்கம் சென்றார்களோ அவர்கள் தான் ஜயித்தார்கள். தோற்றவர்கள் ஓட வேண்டும். ஜயித்தவர்கள் அவர்களைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு வருவார்கள்.

எதனாலோ, டிரில் வாத்தியார் திடீரென்று வேலையை விட்டுப் போய்விட்டார். அப்புறம் அவர் எங்கு சென்றார் என்பது தெரியவில்லை.

பல வருஷங்களுக்குமுன் பள்ளியில் நடந்த அந்த விளையாட்டை நினைத்துக்கொண்டு மவுண்ட்ரோடு பாதசாரிகளில் ஒருவனாக அன்று வெள்ளைக்கோட்டு அருகே காத்திருந்தேன்.

'விசில்' ஊதப்பட்டது. எனக்கு முன்னால் இருந்தவர்களையும் தெக்கித் தள்ளிக் கொண்டு எதிர்ப் பக்கம் நோக்கி நகர்ந்த வேகத்தில் "அடே டே! என்னப்பா சௌக்கியமா?" என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். பாதசாரிகளின் பந்தயத்தை நடத்திக்கொண்டிருந்த டிராபிக் போலீஸ்காரரின் குரல் அது. அதே டிரில் வாத்தியார்! "அதே பள்ளிக்கூடத்து டிரில்தான் இது!" என்று சொன்னதும், "அதே தான், அதேதான்... இடம்தான் மவுண்ட் ரோடு....!" என்று கூறிவிட்டு, விசிலை மீண்டும் ஒரு முறை அழுத்தமாக ஊதினார்.

கதிர்



# ஊ ஊஹ்ஹ... ஊஊஹ்

ஒரு டீஸ்பூன் அளவு உட்வார்ட்ஸ் 'கிரைப் வாட்டர்', உங்கள் குழந்தை அலறுவதை நிறுத்திவிட்டு ஆனந்தக் கனவு காண ஆரம்பித்து விடுகிறது. குழந்தையின் சிறு கோளாறுகள்— வயிற்றில் வாயுக் கோளாறு, பல்வலி போன்றவைகளிலிருந்து சுகம்பெற உட்வர்ட்ஸினால் மட்டும்தான் முடியும். ஒரு நூற்றாண்டுக்கு மேலாக, தாய்மார்கள் உட்வர்ட்ஸ் உபயோகித்திருக்கிறார்கள். நல்ல ஆரோக்கியமான குழந்தைகளை வளர்த்திருக்கிறார்கள்.

## உட்வர்ட்ஸ் 'கிரைப் வாட்டர்'

**100 வருஷங்களுக்கு மேலாக உலகெங்கிலும் உபயோகிக்கப்படுகிறது.**



அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட்., பம்பாய், கல்கத்தா & லக்னோ • டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதராஸ் • எம். ஜி. ஷஹானி & கோ. (டில்லி) பிரைவேட் லிட்., டில்லி.

*Alvers AT 141-TM.*

"எனது தொழிற்சாலைக்காக
அவசரமாக எனக்கு கடன்
தேவையாயிருக்கிறது.
நான் என்ன செய்வேன்?"



"நீங்கள் ஸ்டேட் பாங்கில்
முயற்சி செய்தீர்களா?
சிறிய கைத்தொழிலை நடத்து
பவர்களுக்கு பண உதவி செய்
வதற்காகவே அவர்களிடம்
ஒரு திட்டம் இருக்கிறது"

ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா தனது பல கிளை ஆபீஸ்களிலும் சிறிய கைத்தொழில் நடத்து பவர்களுக்குத் தேவையானபோது கடன் கொடுத்து ஆலோசனைகளையும் கூறத் தயாராக இருக்கிறார்கள். முழு விவரங்களுக்கு உங்கள் நகரத்திலுள்ள கிளை ஆபீஸின் ஏஜெண்டை தயவுசெய்து அணுகிக் கேளுங்கள்.

**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா**

இந்தியாவின் தலைசிறந்த பாங்க்

SB-33 TAM

# பிஞ்சு நெஞ்சம்



கஸ்தூரி பஞ்சு

ஆறாம் வகுப்பு அறை அமளி துமளிப் பட்டது. இரண்டாவது பீரியட் முடிந்து மூன்றாவது ஆரம்ப மாகும் சமயம்.

''இப்போ இங்கேதாண்டா வெச்சிருந்தேன். அந்த நிமிஷத்துக்கு முன்னாடி வாத்தியார்கிட்டே கேட்டுண்டு வெளியில் போயிட்டு வந்து பார்த்தால், பையிலே பேனாவைக் காணோம்.'' கண்களைக் கசக்கிக்கொண்டே சொன்னான் ராமு.

''ஆமாம். உன் பையிலே வெச்ச பேனா இறக்கை முளைச்சுப் பறந்து போயிடுத்தோ? சரியாகப் பாருடா. இல்லே, ஒருவேளை இவரு பேனா கொண்டு வராமலே 'கப்ஸா' அடிக்கிறாரோ, என்னவோ?'' கடைசிப் பெஞ்சியில் இருந்த நெட்டைப் பையன் கூறவும் அந்த அறை 'கொல்'லென்று சிரிப்பலைகளால் நிறைந்தது.

ராமுவுக்கு ரொம்ப அவமானமாகப் போய் விட்டது. அவன் வந்து சேர்ந்த ஒரு வார மாகக் கவனித்துக் கொண்டுதான் வருகிறான்; அந்த நெட்டைப் பையன், அதுதான் சுந்தர், சாதுவான ராமுவை வம்புக்கு இழுப்பதும், வேண்டுமென்றே ஏதாவது கலாட்டா செய் வதுமாக இருப்பதையும்.

புதுப் பையன் என்பதாலும் அதிகமாக அவன் செய்கை களைக் கவனிக்காமல் அவன் வழிக்கும் போகாமல் கொஞ்சம் ஒதுங்கியே இருந்தான் ராமு.

இன்று என்னடாவென்றால் உயர் ரகப் பேனா, அத்தான் அன்பளிப்பாக வாங்கிக் கொடுத்தது. அதையே அவன் 'அபேஸ்' செய்து விட்டுக் கிண்டல் வேறு செய்கிறானே!

சுந்தர்தான் அந்தப் பேனாவை எடுத்திருப்பான் என்பதில் ராமுவுக்குத் துளியும் சந்தேகமில்லை. வகுப்பறைப் பையன்கள் எல்லோரும் அவன் கைக்குள் இருப்பவர்கள். ஆகவே அவனைக் காட்டிக் கொடுக்காமல் மறைத்தார்கள்.

கசமுச வென்று குழப்பமாக இருந்த வகுப்பினுள் நுழைந்தார் மூன்றாம் பீரியட் உபாத்தியாயர். அங்கு இருந்த நிலவரத்தைக் கண்டு, ''என்னடா இங்கே கலாட்டா?'' கைப் பிரம்பை மேஜை மீது 'டொக் டொக்' கென்று தட்டிக் கொண்டு கேட்டார்.

ராமு நடந்தவற்றைச் சொன்னான்.

''அப்படியா? டேய் பசங்களா? எல்லோரும் பெஞ்சு மீது ஏறி நில்லுங்கள்'' என்றார் உரத்த குரலில்.

சடசட வென்று பையன்கள் மேஜைமீது ஏறி நின்றார்கள்; கடைசிப் பெஞ்சி சுந்தர் கொஞ்சம் தயங்கினான்.

''ஊம், ஏறு'' — வாத்தியாரின் பிரம்பு மேஜை மீது மோதிற்று.

தயக்கத்துடன் ஏறி நின்றான் சுந்தர்.



"ராமு! கோடி பெஞ்சிலிருந்து நீ ஒவ்வொருத்தர் பையாகப் பார்த்துக்கொண்டு வா. நான் இந்தப் பக்கமாகப் பார்க்கிறேன்" என்றார் ஆசிரியர்.

ராமுவுக்குத்தான் எடுத்தது யாரென்று தெரியுமே! விறுவிறென்று நேரே சுந்தரின் பையைத் திறந்து பார்த்தான். அதில் அவனுடைய நல்ல நிப்புப் பேனா மின்னிக் கொண்டிருந்தது.

ராமு அதை எடுத்துக் கொண்டு வாத்தியார் அருகில் போகவும், தலைமை ஆசிரியர் உள்ளே நுழையவும் சரியாக இருந்தது.

"என்ன இது? ஏன் எல்லாப் பிள்ளைகளும் பெஞ்சுமீது நிற்கிறார்கள்?" என்று கேட்டார்.

உபாத்தியாயர் விஷயத்தை விவரித்தார்.

ராமு தன் கையிலிருந்த பேனாவைக் காட்டி, "இதோ கிடைத்து விட்டதய்யா" என்று கூறினான்.

"அப்பாவா?" அவ்வளவு பிள்ளைகளும் அதிர்ந்து நின்றார்கள். 'புதிதாக வந்து சேர்ந்த அவன் நம்கள் தலைமை ஆசிரியர் மகனா?'

"ஓஹோ, அதுதான் அவ்வளவு கர்வமோ? இருக்கட்டும்" என்று மனத்தில் கறுவிக் கொண்டான் சுந்தர்.

"யாரடா எடுத்தவன்?" என்று வாத்தியார் கேட்டார்.

"அந்தச் சுந்தருடைய பையில் இருந்தது ஸார்!" மெதுவாகச் சொன்னான் ராமு.

"டேய், வாடா இங்கே!" என்று கோபத்துடன் கர்ஜித்தார் உபாத்தியாயர்; பிரம்பை ஓங்கினார்.

"அதை இங்கே கொடுங்கள்" என்று தலைமை ஆசிரியர் வாங்கிக் கொண்டார்.

நடுக்கத்துடன் வந்து நின்ற சுந்தரின் கையைப் பற்றி இழுத்து, "படிக்க வந்தாயா, திருட வந்தாயா? இவ்வளவு சின்ன வயதில் எதற்கடா இந்த அவ புத்தி? இனி மேல் இம்மாதிரி செய்வாயா, செய்வாயா?" என்று கேட்டபடியே 'சொளர், சொளர்' என்று பிரம்பினால் அவன் உள்ளங்கையில் அடித்தார்.

"இல்லை ஸார், இனிமேல் செய்ய மாட்டேன், ஸார்" எனத் துடித்தான் சுந்தர்.

தலைமை ஆசிரியர் போய்விட்டார். வகுப்பு நடந்து முடிந்தது. வீட்டுக்குப் புறப்படும் போது, ராமுவைப் பார்த்து, ஒரு முறை முறைத்து விட்டுப் போனான் சுந்தர். அந்தப் பார்வைக்கு மறுநாளே பதில் கிடைத்து விட்டது.

வகுப்புப் பையன்கள் எல்லோரும் அவனைக் கண்டு ஒதுங்கினார்கள். "டேய், ஜாக்கிரதை. பெரிய இடத்துச் சிநேகிதம் நமக்கு வேண்டாம். அவன் போய் அப்பாவிடம் ஏதாவது சொல்லிக் கொடுத்து நம்மைப் பள்ளிக்கூடத்தை விட்டே விரட்டினாலும் விரட்டிவிடுவான்" என்று சில குறும்புக்கார மாணவர்கள் அவன் காதுபடக் கூறினார்கள்.

மற்றுமுள்ள பயந்த பிள்ளைகள், தலைமை ஆசிரியர் பிள்ளை என்பதற்காக, அவனை விரோதித்துக் கொள்ளக் கூடாது என்கிற எண்ணத்துடன் அவன் கேட்டவற்றுக்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு நகர்ந்தார்கள்.

அவர்களுடைய அந்தப் பதிலில் பணிவும் அச்சமும் மட்டும் இருந்தனவே தவிர, சம வயதுச் சிறுவர்களுக்கான சிநேக பாவம் சிறிதும் இல்லை. வேதனையாக இருந்தது ராமுவுக்கு.

அன்று பேனா எடுத்ததற்காகச் சுந்தரை வாத்தியார் அடித்திருந்தால் கூடப் பையன்கள் அதை இவ்வளவு தூரம் பாராட்டியிருக்க மாட்டார்கள். இந்த அப்பா வந்து சுந்தரை அடித்துத் தொலைப்பானேன்? ராமுவுக்கு அப்பாவின் மீது கோபம் கோபமாக வந்தது.

அன்றிரவு தந்தையிடம் சண்டையான சண்டை போட்டான் ராமு. அவர் சிரித்தார். "போடா மக்கு. உன் பேனாவை எடுத்தான் என்பதற்காகவா அடித்தேன்? திருடுவது தப்பு. அந்த வழக்கத்தைத் திருத்துவதற்காகத்தான் அவனை அடித்தேன்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

ஒரு வாரம் சென்றது. மறுபடியும் அமளி. வகுப்பறை அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. இன்றும் இரண்டாவது பீரியட் முடிந்து, மூன்றாவது பீரியட் ஆரம்பமாகும் சமயம். அந்தச் சமயம்தான் தலைமை ஆசிரியர் வகுப்புக்களைப் பார்வையிட 'ரவுண்ட்' வரும் நேரம்.

உபாத்தியாயரும், தலைமை ஆசிரியரும் ஒன்றாக வகுப்பறைக்குள் நுழைந்தார்கள்.

"மறுபடியும் என்னடா கலாட்டா?" என்ற தலைமை ஆசிரியரின் பார்வை சுந்தரின் மீது பதிந்தது.

"ஸார்! சம்பளம் கட்டக் கொண்டுவந்த பணத்தைக் காணவில்லை ஸார்" என்று கண்ணைக் கசக்கினான் ஒருவன்.

"என்ன அநியாயம் இது? படிக்கும் பையன்களுக்கு எதற்கு இந்தப் பேய் புத்தி? இந்தத் தடவை சும்மா விடக் கூடாது. அன்று போல எல்லோரையும் பெஞ்சு ஏறுங்கள். போன பீரியட்டுக்கூடப் பார்த்ததாகச் சொல்கிறான். ஆகையால் பணம் அதற்குள் எங்கும் போயிருக்க முடியாது. ஊம்" என உறுமினார் தலைமை ஆசிரியர்.

பையன்கள் பெஞ்சு மீது ஏறி நின்றார்கள்.

சோதனை நடந்தது. "இதோ, இங்கே இருக்கிறதே! இது யாருடைய பை?" உபாத்தியாயர் தூக்கிக் காண்பித்த பையைப் பார்த்த பையன்கள் யாவரும் ஒரே குரலில், "என்னுடையது இல்லை ஸார்" என்று கூவினார்கள், ஒருவனைத் தவிர.

அவன்தான் ராமு. தலையைக் குனிந்து கொண்டு நின்றிருந்தான் அவன். உபாத்தியாயர் அதிர்ந்து போனார்.

"ஏண்டா ராமு, இது உன் பையா?" உபாத்தியாயர் கேட்டார்.

"ஆமாம்" மெல்ல முனகிக் கொண்டு தலையைப் பக்கவாட்டில் ஆட்டினான் ராமு.

"அப்போ, பணம்?" இப்போது கர்ஜித்தது வாத்தியார் இல்லை; தலைமை ஆசிரியர், அதாவது அவன் தந்தை.

குனிந்த தலையை நிமிர்த்தவில்லை ராமு. "கேட்கிறேன், பதில் சொல்லுடா!" அவன் முகத்தைப் பற்றி முரட்டுத்தனமாக நிமிர்த்தினார் தலைமை ஆசிரியர்.

கண்களில் கலக்கம் படர, "அவனுடையது" என்கிற பாவனையில், பணம் இருந்த பையனின் பக்கம் கையை நீட்டிச் சுட்டிக் காட்டினான் ராமு.

# Firestone

## பயர்ஸ்டோன்

### நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்

**நீங்கள் இதுவரைக் கண்டிராத மிகவும் பாதுகாப்புள்ள டிரெட் உடையது**

இதோ இந்த பயர்ஸ்டோன் நியூ டிலக்ஸ் சாம்பியன் டயரின் பக்கவாட்டைப் பாருங்கள். இந்த டிரெட்டின் டிசைன், மோட்டாரோட்டிகளுக்கு மிகவும் கூடுதலான டயர் பாதுகாப்பை அளிப்பதற்கென சோதனைக் களங்களிலும் ஓட்டப் பந்தயப் பாதைகளிலும் நன்கு சோதித்துப் பல ஆண்டுகளாக நடத்திய ஆராய்ச்சியின் விளைவு. ஆயிரக்கணக்கான பாதுகாப்பளிக்கும் கோணங்கள் ஏகதாளமாகக் கவ்விப் பிடிப்பதால், உங்களுக்கு வண்டி ஓட்டுவது எளிதாகவும், புறப்படும்போதும் நிறுத்தும்போதும் நல்ல இழுப்புத் தன்மையுடனும் இருக்கின்றன. நீங்கள் பயர்ஸ்டோன் வாங்கும்போது எதைப் பெறுகிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரிகிறது.





**பயர்ஸ்டோன் - தரத்துக்கும் உழைப்புக்கும் உங்கள் சின்னம்**

அவ்வளவுதான். ருத்ரமூர்த்தியாகவே மாறிவிட்டார் ஹெட்மாஸ்டர். "ஏண்டா திருடுகிறாயா? பணத்தைத் திருடுகிறாயா? எந்தக் கை செய்தது? எந்தக் கை செய்தது?" ஒரு கேள்விக்கு ஒன்பது அடியாக அந்தப் பிஞ்சுக் கையைப் பிய்த்தெடுத்துவிட்டார்.

அருகே புகுந்து தடுக்க வந்த உபாத்தியாயரிடம், "நீங்கள் பேசாமல் இருங்கள். அன்று அந்தப் பையன் சுந்தரை நான் அடித்த போது சும்மாதானே இருந்தீர்கள். அது போலவே இப்போதும் இருங்கள். என் பிள்ளை என்பதற்காக ஏது வேண்டுமானாலும் செய்யலாமா என்ன? நியாயம் என்பது எல்லோருக்கும் ஒன்றுதான்" என்று அவரிடம் சீறிவிட்டு, தம் அறைக்குத் திரும்பினார்.

ரத்தக் களறியாகக் கிடந்த ராமுவின் கையைப் பார்த்த பையன்களுக்கு அழுகை அழுகையாக வந்தது. விட்டு மணி அடித்ததும் அவனைச் சுற்றிக் கும்பலாகச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். எங்கேயோ போய், ஏதோ ஒரு களிம்பைக் கொண்டு வந்து அவன் கைகளுக்குப் பூசினான் சுந்தர். அவன் மனம் இப்போது அடியோடு மாறிப் போயிருந்தது. பையன்கள் தங்களுக்குத் தெரிந்த அளவுக்கு உபசாரம் செய்தார்கள். ராமு மனமகிழ்ந்தான்.

"ஏண்டா ராமு, என்னடா இப்படிச் செய்துட்டே? திருடலாமாடா? உனக்கு எதற்குப் பணம்?" என்று கேட்டுக் கொண்டே அவன் கைகளைப் பிடித்தாள் தாயார்.

"ஐயோ, தொடாதேம்மா!" கைகளைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான் ராமு.

"கையைக் காண்பி!"

ரத்தக் களறாகக் கிடந்த அவன் உள்ளங் கையைப் பார்த்துத் துடிதுடித்தாள் அம்மா.

"அய்யோ ராமு! யாருடா அடிச்சது?"

"அப்பாதாம்மா அடிச்சார். இல்லையில்லை, எங்க ஹெட்மாஸ்டர் அடிச்சார்."

"போனதுமே விளையாட்டு. ஏண்டா, ராமு! நயா பைசா கூடக் கேட்காமல் எடுக்காத நீ எதற்காக இன்னொருத்தன் பணத்தைத் தொட்டாய்? அதைச் சொல்லு."

"எங்க ஸ்கூல் பசங்களெல்லாம், நான் ஹெட்மாஸ்டர் பிள்ளைன்னு தெரிஞ்ச பிறகு என்கிட்டே அதிகமாகப் பேசறதில்லே. அப்படிப் பேசினாலும் இரண்டொரு வார்த்தை ரொம்பவும் மரியாதையாகப் பேசிட்டுப் போயிடுவா. எனக்கு அதெல்லாம் என்னவோ போலேயிருந்தது...."

அம்மா குறுக்கிட்டு, "அதற்கும் பணத்தை எடுத்ததற்கும் என்ன சம்பந்தம்?" என்றாள்.

"என்னை எங்க ஸ்கூல் பசங்க தங்களோடு சேர்த்துக் கொள்ளாதது வருத்தமாக இருந்தது. ஆனால் அதை விட அதிக வருத்தம் என்னவென்றால், நம்ப அப்பாவைப் பற்றி அவர்கள் தப்பா நெனைச்சுட்டா. என் பேனாவைத் திருடினதால்தான் சுந்தருக்கு அடி கிடைச்சதுன்னு பசங்க பேசிண்டா. எனக்கு அதைக் கேட்டு ரொம்ப ரொம்பக் கோபமாயிருந்தது. யார் தப்புச் செய்தாலும் தம் சொந்தப் பிள்ளையாக இருந்தாலும் ஒரே மாதிரி தண்டனைதான் அப்பா கொடுப்பார் என்று அவர்களுக்குத் தெரிவதற்காகவே அந்த மாதிரி பணத்தை எடுத்து, அப்பாவின் குணத்தை அவர்கள் அறியும்படி செய்தேன். நீ சொல்லும்மா நான் செய்தது தப்பா?"

அவனை இறுகத் தழுவிக் கொண்ட அம்மா "என் கண்ணே!" என்றாள்.

இடை ரேழியில் நின்று கொண்டே உள்ளே நடந்த சம்பாஷணைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தலைமை ஆசிரியர் பொங்கி வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு வந்த சுவடு தெரியாமல் திரும்பினார்.

"ராமு! உன் பிஞ்சு நெஞ்சின் உணர்ச்சிகள் இந்தப் பெரியவனுக்குக்கூடப் புரியவில்லையேடா!" என அவர் உள்ளம் புலம்பியது.

## நாகர்களின் ராஜ்யம்

இந்தியாவிலுள்ள சுமார் ஆறு லக்ஷம் நாகர்களில் பெரும்பாலோர் இந்தியா பர்மா எல்லைப் புறத்தில் நாக மலைகளிலும் டுவென்ஸாங் பிரதேசத்திலும் வாழ்கிறார்கள். இப்பகுதியே நாகர்களின் புதிய ராஜ்யமாக விளங்கப் போகிறது. நாகர்களுக்கு, தங்களைத் தாங்களே நிர்வகித்துக் கொள்ளவும் முன்னேற்றமடையவும் நிறைய சந்தர்ப்பங்கள் அளிப்பதே பாரத அரசாங்கத்தின் நோக்கமாக இருந்து வருகிறது. அதனால்தான் பாரதத்துக்கு உட்பட்ட தனி நாகர்களின் ராஜ்யம் என்ற கருத்தினைப் பிரதமர் நேரு ஒப்புக் கொண்டார். ஆறாயிரம் சதுர மைல்களே உள்ள புதிய ராஜ்யத்துக்கு வருவாய் மிகவும் குறைவாக இருக்குமாதலால் மத்திய சர்க்காரிடமிருந்து பெருமளவுக்கு மான்யங்கள் பெற வேண்டி இருக்கும். பிஸோவைப் பின்பற்றும் கலகக்காரர்கள் பலர் ரயில் கொள்ளை போன்ற பயங்கரச்செயல்களில் இறங்கி மக்களுக்குச் சொல்லொணாத் துயரம் அளித்து வருகின்றனர். இவர்களுடன் சமாதானமாய்ப் போகவே விரும்பும் நம் அரசாங்கம் ஜூலை முதல் தேதி தொடங்கி இரண்டு மாத காலம் இவர்கள் மனம் திருந்த அவகாசம் அளித்துள்ளது. இந்த நல்ல தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு இவர்கள் வன்முறைச் செயல்களை விட்டொழித்து புது ராஜ்யத்தின் முன்னேற்றத்துக்கான ஆக்க வேலைகளில் தங்கள் கவனத்தைத் திருப்புவார்கள் என்று எதிர்பார்ப்போம்.

# பனி மண்டலக் காடுகள் —







வட துருவத்தை அடுத்துள்ள பகுதிகளில் பனி மண்டலக் காடுகளைக் காணலாம். கானடாவின் மத்தியப் பகுதியிலிருந்து ரஷ்யாவின் கிழக்கெல்லை வரை இந்தக் காடுகள் பரவிக் கிடக்கின்றன. நீண்ட மாரிக் காலம் முழுதும் இங்குள்ள நதிகளும் ஏரிகளும், ஏன், பூமியே கூட உறைபனியில் மூழ்கிக் கிடக்கும். மரம் வெட்டும் தொழிலைக் கவனமாகச் செய்வதற்கு இந்தக் காலம் மிகவும் ஏற்றது. மரங்களை வெட்டிக் காய்ந்தவுடன் பனி மூடிய வெட்டுமரங்களைப் பனிப் பாதை மீது இழுவைகளில் இழுத்துச் செல்லுவது வழக்கம். இப்படி இழுத்துச் சென்று உறைந்து கிடக்கும் நதிகளில் கொண்டு போய்க் குவித்து விடுவார்கள். மாரிக் காலம் முடிந்து கோடை ஆரம்பமாகும்போது ஆற்றில் பனி உருகவே மரக்கட்டைகள் அதில் மிதந்தபடி ஆற்றோரங்களில் உள்ள மரம் அறுக்கும் தொழிற்சாலைகளுக்குப் போய்ச் சேரும்.

இந்தக் காடுகளில் வளரும் மரங்களின் இலைகள் அகலமாக இருக்காது. ஊசி போலிருக்கும். ஆகவே இவைகளுக்கு ஊசி இலை மரக் காடுகள் என்றும் ஒரு பெயர். உங்கள் சமூகப் பாடத்தில் படித்திருப்பீர்களே, இந்தக் காடுகளில் வாழும் பிராணிகளின் தோல் மிக விலை உயர்ந்தது. காரணம் இவை மிக மிருதுவாகவும் ரோமம் அடர்ந்தும் இருக்கும். ஆகவே இங்கு வாழும் மக்கள் மாரிக் காலத்தை எர்மைன் பேவர், நரி போன்ற பிராணிகளை அவைகளின் தோலுக்காகக் கண்ணி வைத்தோ, வேட்டையாடியோ பிடிப்பதில் செலவிடுகிறார்கள். இப்படி வேட்டையாடிச் சேகரித்த தோலைக் கொடுத்து விட்டுத் தங்களுக்கு வேண்டிய உணவு, துப்பாக்கி முதலிய பொருள்களைப் பண்டமாற்று முறையில் பெற்று வாழுகிறார்கள்.

இந்தப் பனி மண்டலக் காடுகளில் வாழும் பிராணிகளுக்கு விரோதிகள் அதிகம். ஓநாய்களிடமிருந்து கரிபோ என்ற கலைமான் கூட்டம் நதிகளில் இறங்கி நீந்திச் சென்று தப்பிக்க முயலுவதையே இங்குள்ள படத்தில் காண்கிறீர்கள். வடக்கு ஒண்டேரியோ மாகாணத்தில் வாழும் 'கிரீ' என்ற இனத்து இந்தியர்கள் மாரிக் காலத்தில் கண்ணி வைத்து 'பர்' என்று சொல்லப்படும் 'தோல்' சேகரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதையும் இங்குள்ள மற்றொரு படத்தில் காண்கிறீர்கள். எஸ்கிமோக்கள் பனி மூடிய சூழ்நிலைக்கு ஏற்ப வெள்ளைத் துணியைக் கேடயம் போல் மறைத்துக் கொண்டு 'ஸீல்' என்ற பிராணிகளை வேட்டையாடுவதைப் பாருங்கள். இதன் தோல் மிக விலைமதிப்புடையது. ஊசி இலைக் காடுகளுக்கும் வடக்கே மரங்களோ, செடிகளோ இல்லாத பனி மண்டலம். இதைத் துந்த்ரப் பிரதேசம் என்று கூறுவார்கள்.

இங்கு உங்களை அடுத்த வாரம் அழைத்துப் போகிறேன்.



**உங்கள் ஆல்பத்துக்கு:**

இந்த விநோதமான ஏணியின் மீது ஏறி நின்று பார்க்கும் இவர் பிரான்ஸ் தேசத்தின் வடக்குப் பகுதியைச் சேர்ந்த மாட்டு இடையர். தமது மாட்டு மந்தையின் மாடுகளைக் கம்பத்தின்மீது ஏறிக் கணக்குப் பார்க்கிறார்.

# காட்டுக்கொடி

க்ஷீரசாகர்

"அப்படியானால் கேள்!" என்று ஆரம்பித்தான் அவன்.

அவனுக்குக் கிட்டத்தட்ட அறுபது வயது இருக்கும். குட்டையான மெலிந்த உருவம். முதுகு கூனிக்கூட விட்டது. பேசும் பொழுது இடையிடையே இருமல் வேறு; அவன் நோயாளி என்பதைக் கூறாமலே கூறிக் கொண்டிருந்தது. ஆனால், அவன் பார்வையைக் கொண்டு கணக்கிட்டால், அவன் எதையுமே பொருட்படுத்துவதில்லை என்று தோன்றியது.

அவன் அருகில் உட்கார்ந்திருந்த மனிதனுக்குக் கிட்டத்தட்ட அவன் வயதே இருக்கும். ஆனால் நல்ல பருமனான தேகம்; நோய் நொடி எதுவும் அவனை அண்டவில்லை என்பதைக் காட்டியது. முறையின்றி நீண்டு வளர்ந்திருந்த தாடியும் சுருக்கம் விழுந்த கண்களும் அவன் முகத்தில் ஓர் ஏக்கம் குடி கொண்டிருப்பதை எடுத்துக்காட்டின.

இரவு நேரம். குன்றின் மீது மூங்கில் குச்சி களினால் வேயப்பட்ட குடிசை ஒன்றில், பெயருக்குப் பெஞ்சாகக் காட்சியளித்த ஆசனத்தில் எதிரும் புதிருமாக இருவரும் உட்கார்ந்திருந்தனர். நடுவில் நான்கு மூங்கில் கால்களை நட்டு அதன் மீது போடப்பட்டிருந்த பலகை ஒன்று மேஜையாகக் காட்சி தந்தது. மேஜையின் ஒரு மூலையில் பழைய லாந்தர் ஒன்று வைத்திருந்தது. அதன் புகை கக்கும் வெளிச்சம், குடிசைக்குள் வைக்கப்பட்டிருந்த பொருள்களையெல்லாம் மங்கலாக இனம் காட்டிக் கொண்டிருந்தது.

"ஆமாம், கேள்!" என்றான் முதல்வன், இரண்டாமவனிடம். அவன் குரல் காட்டில் எதிரொலித்து மற்ற எண்ணற்ற ஒலிகளுடன் கலப்பது போலிருந்தது. "அப்பொழுது எனக்கு வயது இருபது இருக்கலாம். அருகில் உள்ள காட்டில் மரம் வெட்டிக் கொண்டிருந்தார்கள். அங்கு நானும் வேலையாயிருந்தேன். ஒரு நாள் காட்டிலேயே இருட்டி விட்டது. கூட வேலை செய்தவர்கள் எல்லாரும் போய் விட்டார்கள். நான் மட்டும் தனியனாகத் தங்கி விட்டேன். நானோ நகர்ப்புறத்தைச் சேர்ந்த வாலிபன். காட்டுப் புறத்தையே கண்டறியாதவன். தனியனாகக் காட்டில் அப்படி நேரிட்டால் எப்படியிருக்கும்? இது சொல்லித் தெரிய வேண்டிய காரியம் அல்லவே! நான் கதி கலங்கிப் போய் விட்டேன். பிள்ளைப் பிராயத்தில் கேட்ட கதைகள் வேறு என் நினைவுக்கு வந்து என் பயத்தை மேலும் வளர்த்து விட்டன. எதேச்சையாகத் தொலைவில் 'மினுக் மினுக்' கென்று ஒரு விளக் கொளி தென்பட்டது. அதைக் கண்டு எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கும் என்பதை நான் சொல்லியா நீ புரிந்து கொள்ள வேண்டும்?" என்றான். ஒரு பலத்த இருமல் அவனை உலுக்கி எடுத்து விட்டது. அவன் மேஜை முனையை இரு கைகளாலும் இறுகப் பிடித்துக் கொண்டான்.

பக்கத்தில் இருந்த இரண்டாமவனுக்கு அவனுடைய அந்த இருமல் நிற்கவே நிற்காதோ என்று தோன்றியது. அவன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு பீடி இலையை எடுத்துக் கொண்டான். அதில் கொஞ்சம் புகையிலையைச் சுற்றிப் பற்ற வைத்துக் கொண்டான். முதல்வன் இருமிய இருமலில் மிகவும் களைத்துச் சோர்ந்துவிட்டான். அவன் கண்கள் அந்தக் களைப்பில் மூடிக் கொண்டன. சிறிது நேரத்துக்குப் பின், கண்களை அப்படியே மூடிக் கொண்டவண்ணம் அவன் மேலும் கூறலானான்:



''அந்த விளக்கொளி எதிரேயுள்ள மலை மீதிருந்த ஒரு குடிசையிலிருந்து வந்து கொண்டிருந்தது. நான் அங்கே போய்ச் சேர்ந்தேன். கதவு மூடியிருந்தது. ஒரு சாளரம் மட்டும் திறந்திருந்தது. நான் எட்டிப் பார்த்தேன். உள்ளே ஒரு பெண் இருந்தாள் தனியாக. எனக்கு வியப்பாயிருந்தது. அப்பொழுது என் காலடிச் சத்தம் அவளுக்குக் கேட்டு விட்டது போலும். துணுக்குற்றுக் கையில் இருந்த பொருளைக் கீழே வைத்தாள் அவள். உரத்த குரலில், ''யார் அது?'' என்று கேட்டாள்.

''நான் ஒரு வழிப்போக்கன். பாதை தவறி விட்டேன்!'' என்று பதில் அளித்தேன்.

''அதற்கு நான் என்ன செய்ய முடியும்?'' என்றவள், ''என் தந்தை காட்டு மாளிகையில் காவல் புரியப் போயிருக்கிறார். நான் மட்டும் தனியாயிருக்கிறேன். அதனால் உங்களுக்குத் தங்க இங்கே இடம் அளிப்பதற்கில்லை!'' என்று முடித்தாள்.

நான் தலை குனிந்துகொண்டேன். அவள் சொல்வது நியாயந்தானே? ஆனால் எனக்கோ பயம் தாளவில்லை. அந்தக் காட்டுப் பகுதியோ எனக்குப் புதிது. எனவே, அங்கிருந்து அடி எடுத்து வைக்க எனக்குத் தோன்றவில்லை; துணிவும் உண்டாகவில்லை.



அவள் என்னை நோக்கி அருகில் வந்து, ''நான் சொன்னது உனக்குக் காதில் விழவில்லையா?'' என்று கேட்டாள்.

நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவள் என்னை நன்றாகப் பார்த்தாள். லாந்தர் ஒளி என் முகத்தில் விழுந்து கொண்டிருந்தது. என் கண்களில் தாண்டவமாடிக் கொண்டிருந்த அச்சக் குறியை அவள் உணர்ந்து கொண்டு விட்டாள் போலும். அவள் குரல் சற்றுக் கனிந்து விட்டது. ''இந்தப் பக்கத்துக்கு நீ புதிதோ?'' அவள் கேட்ட கேள்விக்கு நான் தலையை ஆட்டினேன்.

''இரு, கதவைத் திறக்கிறேன். உள்ளே வரலாம்!'' என்று சொன்னவள் சொன்னபடியே செய்தாள்.

உள்ளே சென்றதும் நான் கழுத்தில் போட்டிருந்த கோடரியை இறக்கி ஒரு மூலையில் சாத்தினேன். அதைத் தொடர்ந்து அறை முழுவதிலும் பார்வையைச் செலுத்தினேன். வாசற்புறத்துக்கு அருகிலேயே ஒரு பெஞ்சு கிடந்தது. அதில் நான் உட்கார்ந்து கொண்டேன். அவள் ஆர்வத்தோடு என்னைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

''அருகில் உள்ள காட்டில் வேலை கிடைத்திருக்கிறது. நான் அங்குதான் வேலை செய்து வருகிறேன். இன்று காட்டிலேயே இருட்டி விட்டது. என் தோழர்கள் முன்பே போய் விட்டார்கள். நான் வழி மறந்து விட்டேன்!'' என்றேன் நான்.

''பரவாயில்லை!'' என்று வேறு ஒரு புறம் பார்வையைச் செலுத்திக் கொண்டே கூறினாள். பிறகு எனக்குப் பசியாற ஏதோ கொடுத்தாள். போர்த்திக் கொள்ள ஒரு கம்பளியை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்து, ''இதைப் போர்த்திக் கொண்டு இந்தப் பெஞ்சியின் மேலேயே படுத்துத் தூங்கு. பொழுது விடிந்ததும் போய்விடு!'' என்று கூறினாள்.

நான் பெஞ்சியின் படுத்துக் கொண்டேன். குடிசையில் மற்றொரு புறத்தில் பாட்டுப் பெட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மீது அவள் படுக்கையைப் போட்டுக் கொண்டாள். லாந்தர் அறை நடுவில், கூரையில் மாட்டியிருந்து காற்றில் தொங்கிக் கொண்டிருந்தது. அன்றிரவு அவளும் தூங்கவில்லை; நானும் கண் மூட

# tik-20

# டிக்-20

## மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது



கெய்கி



டாடா-பைஸன் தயாரிப்பு

---

## சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணெய் அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது. எளிதானது. எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- உதிரி பாகங்கள் கிடைக்கும்



மண்ணெண்ணெய் அடுப்பு

கவலையற்ற சமையல்



சுவையான சமையல்

தயாரிப்பாளர்கள்:

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

77, பௌபஜார் தெரு, கல்கத்தா-12

# உங்கள் சமையலுக்குத் தேவையான மணத்திற்கும் ருசிக்கும்



## வெஜிடபிள் எண்ணெய் களாலான




## வனஸ்பதி உபயோகியுங்கள்

அது ஆரோக்யத்திற்கு ஏற்றது: தூய்மை யானது. வைட்டமின்கள் A மற்றும் D யுடன் கூடியது சுத்தமாகப் பாக் செய்யப்பட்டு 3 வசதியான குடும்பத்திற்கேற்ற சைஸ்களில் கிடைக்கின்றது.

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், சென்னை




OK பரிசுக் கூப்பன்களை சேகரியுங்கள்

EP—EAC 9



அத்தியாயம்

முப்பத்துமூன்று

## முறிந்த கனவு

ஏதோ நினைவு வரப் பெற்றவர்போல் மெல்லத் தலை தூக்கி, "இதெல்லாம் சரிதான், கவிஞரே! சளுக்கியருக்காக என்று சொல்லிப் பல்லவ குடிமக்களிடமிருந்த போர்க் கருவிகளையெல்லாம் பழையாறைச் சோழர் பறித்துக் கொண்டு போய் உங்களுடைய இல்லத்து நிலவறையில் சேமித்து வைத்திருக்கிறாரே, அதற்குக் காரணம் என்ன?" என்று அடித் தொண்டையில் வினவினார் முத்தரையர்.

"அதுதான் அவர் செய்த எல்லாக் காரியங்களிலும் அதிமுக்கியமானது நண்பரே! பாண்டியருடன் சளுக்கியர் போர் தொடுக்க வேண்டுமெனத் திட்டமிட்ட உடனேயே தம் படைவீரர்களுக்குத் தேவைப்படும் போர்க் கருவிகளைப் பல்லவ நாட்டிலிருந்தே சேமிக்கத் தளபதி [illegible] திட்டமிட்டான். இதையறிந்த பழையாறைச் சோழர் தாமே முந்திக்கொண்டு அவனுக்குத் தெரியாமல் அந்தப் பணியில் இறங்கலானார். அவரைப் பற்றி நீங்கள் என்ன எண்ணிக் கொண்டிருந்தீர்களோ அதே கருத்தைப் பல்லவ நாட்டுக் குடிமக்களும் கொண்டிருந்ததால் அவருக்கு எத்தனையோ இடங்களில் எத்தனையோ விதமான பயங்கர ஆபத்துக்கள் நேரலாயின. அவற்றிலிருந்தெல்லாம் தப்பி அந்தக் காரியத்தை அவர் விடாப்பிடியாகச் செய்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு. பாண்டி நாட்டின்மேல் சளுக்கிய விக்கிரமாதித்தன் போர் தொடுத்து விட்ட செய்தியைக் கேட்ட பிறகாவது பல்லவ மன்னர் தமது விரக்தி மனப்பான்மையிலிருந்து விடுபட்டுத் தம் விடுதலைப்போருக்கு ஆயத்தம் செய்ய அநுமதி வழங்குவார்—உடனே நீங்கள் படை திரட்டும் முயற்சியில் இறங்குவீர்கள் — ஆள் பலம் திரட்டுவது உங்களுக்குச் சுலபமாயிருக்கும்; ஆனால் ஆயுத பலத்துக்கு எங்கே போவீர்கள்? வெறும் கையோடு இருக்கும் வீரர்களைக் கொண்டு விக்கிரமாதித்தனை எதிர்க்க முடியுமா? எனவேதான், அப்படியொரு நிலைமை ஏற்பட்டால் அதற்கு அநுசரணையாக இருக்க, முன்கூட்டியே ஆயுதச் சேமிப்பில் இறங்கினார் அவர்!" என்று உணர்ச்சி வசப்பட்ட குரலில் கூறிக்கொண்டே உற்சாகமாக எழுந்த பரவாநிமல்லர், "இந்தா



ருங்கள், நண்பரே! இது என் இல்லத்து நிலவறையின் தாழக்கோல்; உங்களை நான் எங்கே சந்தித்தாலும் இதை ஒப்படைத்துவிட வேண்டும் என்று பழையாறைச்சோழர் எனக்குப் பணித்தார்!'' என்றவாறு தம் இடுப்பில் செருகி வைத்திருந்த பெரியதொரு தாழக்கோலை எடுத்து நீட்டினார்.

''வெற்றி, வெற்றி! மகத்தான வெற்றி!'' என்று உரக்கக் கூவிக்கொண்டே அவருடன் பாய்ந்து போய்த் தாழக்கோலை வாங்கினார் பெரும்பிடுகு முத்தரையர்.

இந்தச் சமயம், அந்த ஜீர்ணமயத்து மண்டபத்தின் மறு பக்கத்திலிருந்து, ''தோல்வி, தோல்வி! மாபெரும் தோல்வி!'' என்ற குரல் கேட்டுத் திடுக்குற்ற முத்தரையரும் பரவாதிமல்லரும் அவசரமாக அவ்விடத்தை நோக்கி ஓடினார்கள்.

இவ்வளவு நேரம் அங்கே தூணில் சாய்ந்து உட்கார்ந்திருந்த பழையாறைச் சோழர்தான் அவ்வாறு கூறி விம்மிப் பொருமிக் கொண்டிருந்தார்!

கல்லடி பட்டுப் பிரிந்த நீர் ஆவேச எழுச்சியுடன் மீண்டும் ஒன்றுகூடிச் சேர்வதுபோல் தம்மை மீறிய துடிப்போடு பாய்ந்தோடி வந்த பெரும்பிடுகு முத்தரையர், அங்கே தான முடியாத மன வேதனையால் தொய்ந்து துவண்டு தூணில் சாய்ந்து விம்மிப் பொருமிக் கொண்டிருந்த பழையாறைச் சோழரை அப்படியே அள்ளித் தழுவித் தூக்கி நிறுத்தித் தோளின்மேல் புதைத்துக் கொண்டு, ''மாவீர மகா புருஷரே, என்னை மன்னியுங்கள்! ஆய்ந்தோய்ந்து பாராமல் தங்களை அவமதித்துத் தூற்றிப் பேசிய என்னைத் தயை கூர்ந்து மன்னித்து விடுங்கள்!'' என்று விம்மிக் கரைந்து குரலில் தழுதழுத்தார்.

சேதிராய [illegible]ரும் முத்தரையரும் பேசிய பேச்சுக்களை யெல்லாம் சமனை [illegible] யானை வாகனத்துக்குப் பின் னால் நின்று கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் ஓடி வந்து, பழையாறைச்சோழரின் காலடி பதிந்த மண்ணைத் தொட்டுத் தன் கண்ணில் ஒற்றிக் கொண்டு சற்றுத் தள்ளிப் போய்த் தலை குனிந்து நின்றான். அப்பழுக்கற்ற வீரமா [illegible] ஒருவரை அற்பத்தனமாகச் சந்தேகித்துப் பலவாறு தூஷித்ததுமல்லாமல், அளவிறந்த குற்றம் காத்தும் வகையில் பல சேதிகளைக் கொண்டு வந்து முத்தரையரிடம் சொல்லி மாட்டான் பட்டம் கட்டிக் கொண்டோமே என்று மனம் புழுங்கிக் குமைந்தான் அவன்.



ஆனால் பழையாறைச் சோழரோ எவ்வித சலனமுமின்றி அமைதியாகத் தலை தூக்கி அவலப் புன்முறுவல் பூத்தவாறு, ''ஹும்! நானு மகா புருஷன்? என்னைப் போன்ற ஒரு முழு மூடன், தூரதிர்ஷ்டக்காரன், அவசரப் புத்தி கொண்ட பேதை வேறு யாருமே இருக்க முடியாது! என் முயற்சிகள் அனைத்தும் முறிந்து விட்டன! எனது இலட்சியக் கனவுகளெல்லாம் கலைந்து கானலாகி விட்டன!'' என்று விரக்தியுடன் முணுமுணுத்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு மீண்டும் தூண்மீது சோர்ந்து போய்ச் சாய்ந்தார்.

''என்ன நண்பரே, ஏன் இப்படி மனம் தளர்ந்து போகிறீர்கள்?'' என்று திகிலுடன் வினவினர் பரவாதிமல்லர்.

தலையைத் தாங்கிப் பிடித்தவாறு சில விநாடி மௌனமாயிருந்த பழையாறைச் சோழர், ''ஆமாம், கலைஞரே! என் ஆருயிர்ச் செல்வி இளங்கோப்பிச்சியை நானே எதிரிகளிடம் காட்டிக் கொடுத்து விட்டேன்! எனது இலட்சிய வெறியின் தீக்குண்டத்துக்கு அவளைப் பலியாக்கி விட்டேன்!'' என்று தாள முடியாத துயரத்துடன் பொருமிக் கூறியவர் மேலும் சொன்னர்:-

''நேற்று மாலை நாம் பெருவளநல்லூர் சிற்றாற்றங்கரையிலிருந்து தங்கள் நிலவறைக்குப் போகும்போது கொஞ்சமும் எதிர்பாராதவிதமாக அந்த இல்லத்திலிருந்து பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரும், ஆந்திர இளவரசி உத்தமசீலியும் வெளிப்பட்டுப் போனதைப் பார்த்தோம் அல்லவா?....''

பத்துயிர் பெற்ற நட்பின் ஆழ்ந்த உணர்ச்சிக் கனலால் நீறு பூத்து நின்று கொண்டிருந்த முத்தரையர் இதைக் கேட்டுப் பரபரப்பு அடைந்தவராய், ''என்ன! கலைஞரின் இல்லத்தில் பல்லவ மன்னரைப் பார்த்தீர்களா? நேற்று விடியற்காலை நான் அங்கு போனபோது அந்த இல்லம் பாழடைந்து இருண்டு கிடந்ததுமல்லாமல் அதன் வாயிற் கதவும் தாழிடப்பட்டிருந்ததே!'' என்று துடிப்புடன் வினவினர்.

பரவாதிமல்லர் அவரை நோக்கிக் கையமர்த்தி விட்டுப் பழையாறைச் சோழரின் பக்கம் திரும்பி, ''ஆமாம்; அந்த விந்தையான காட்சியைப் பார்த்த பின் என்னையும் உங்கள் ஆபத்துதவி சம்புவராயனையும் இந்த ஜினாலயத்தில் போய் இருக்கும்படி சொல்லி விட்டு அவரைப் பின்தொடர்ந்து சென்றீர்கள்! அதன் பிறகு என்ன நடந்தது?'' என்று கேட்டார்.

''அந்த விஷயத்தை நான் எப்படிச் சொல்வேன் கலைஞரே! என் வாழ்நாளில் அது வரை அவ்வளவு பெரிய அதிர்ச்சியான அநுபவம் எனக்கு ஏற்பட்டதே இல்லை!'' என்று கசந்த குரலில் சொன்ன பழையாறைச் சோழர் மெல்லக் கண் மூடியவாறு, ''நான் மட்டுமென்ன? நீங்களும் அதைக் கேட்டால் அதிர்ந்துதான் போவீர்கள்! ஆனால் என் மதிப்புக்குரிய சந்திரலேகை சித்ரசர் அவ்விஷயத்தை ஏற்கனவே அறிந்திருக்கலாம்! அப்படி அறியவில்லையென்றால் நம்மைவிட அவருக்குத்தான் அது ஒரு பேரிடிச் செய்தியாக இருக்கும்!'' என்றார்.

பரவாதிமல்லரும் பெரும்பிடுகு முத்தரையரும் ஏதோ ஒரு பயங்கரத் தாக்குதலுக்குத் தம்மை உட்படுத்திக் கொள்ளத் தயாராவதுபோல் கழுத்தை நீட்டி உடம்பை வளைத்துக்கொண்டு அவரை உற்றுப் பார்த்தனர்.

''கேளுங்கள், நண்பர்களே! இன்னமும் நான் நம்புவதற்குச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த விஷயம் என்ன தெரியுமா? நமது ஜன்மப் பகைவன் சளுக்கிய விக்கிரமாதித்தனின் தம்பி மகளான ஆந்திர இளவரசி உத்தமசீலியைப் பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் தம் உயிர்க் காதலியாக ஏற்று அவளுடன் உல்லாச உரையாடல் நடத்திக் கொண்டிருந்த காட்சியைத்தான் அங்கு கண்டேன்!''

முத்தரையர் இதைக் கேட்டு உண்மையிலேயே இடியால் தாக்குண்டவர் போல் துடித்துப் பதறி விட்டார்! ஆனால் பரவாதிமல்லரோ தமது நீண்ட தாடியை அமைதியாக வருடியவாறு புன்முறுவல் பூத்தார்.

''அப்படியானல் முத்தரையரும் இப்போதுதான் முதன் முதலாக இவ்விஷயத்தைக் கேள்விப்படுகிறரோ?'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு வினவினர் பழையாறைச் சோழர்.

''இல்லை, நண்பரே! பரமேசுவரவர்மரின் பேச்சில் இந்த விஷயம் பல முறை பூடகமாக வெளிப்பட்டிருக்கிறது; ஆனல் நான் அதைச் சரியாகப் பொருள்படுத்தி உணரத் தவறி விட்டேன். இப்போதுதான் உண்மை புலனாகிறது'' என்று முணுமுணுத்தார் முத்தரையர்.

பழையாறைச் சோழர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தார்.

''நண்பர் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்க முடியவில்லையே!...'' என்று பூஞ்சிரிப்புடன் இழுத்தார் பரவாதிமல்லர்.

''ஆமாம், கலைஞரே! அது ஒரு மின்னல்தான்; அதைத் தொடர்ந்து பல பேரிடிகள் என் தலைமீது விழுந்து விட்டன!'' என்று விரக்தியுடன் கூறிச்

சிறு பொழுது மௌனமாயிருந்த பழையாறைச் சோழர் திடுமெனத் தலைதூக்கிப் படபடப்பாகப் பேசினார்: ''அந்தச் சித்ராநதிக் கரையிலே பல்லவ மன்னரும் ஆந்திர இளவரசியும் காதல் பேச்சில் களித்திருந்த சமயம், அவர்களுக்குப் பின்னால் — ஒரு வழுக்குப் பாறையின் மறுபுறத்தில் — சளுக்கியத் தளபதி வில்வேலி, ஓங்கிய கத்தியுடன் ஒளிந்து நின்றிருந்ததைக் கண்டேன். பரமேசுவரவர்மரின் நெஞ்சைப் பிளக்க அப்போது அவன் குறி பார்த்துக் கொண்டிருந்தான்......''

சட்டென்று குறுக்கிட்ட முத்தரையர் தம் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு, ''சொல்லுங்கள், நண்பரே! சீக்கிரம் சொல்லுங்கள்!'' என்று மூச்சடைக்கத் திணறிக் கேட்டார்.

ஏக்கப் பெருமூச்சு விட்ட பழையாறைச் சோழர் வெறுப்பும் வேதனையுமாகத் தொடர்ந்து சொன்னார்: ''அந்த ஒரு கண நேரத்தில் என் மனத்திலே பற்பல கேள்விகள் எழுந்து புடைத்தன. 'பரமேசுவரவர்மரை நேரில் பார்த்திராத வில்வேலி அவர் இருக்கும் இடத்தை எப்படி இத்தனை குறிப்பாகக் கண்டுபிடித்துக்கொண்டு வந்திருப்பான்? ஆந்திர இளவரசி அவரை அவனுக்குக் காட்டிக் கொடுத்து விட்டாளோ? அவ்வாறு காட்டிக் கொடுக்கத்தான் அவரைக் காதலிப்பதுபோல் நடித்து இங்கு அழைத்து வந்திருக்கிறாளோ? அவள் எப்படி, யார் மூலமாக அவரை இன்னாரெனத் தெரிந்து கொண்டாள்? அவர் வரைந்து கொடுத்து விட்டு வந்த ஓவியத்தின் மூலம் அது வெளிப்பட்டு விட்டதோ? அல்லது அவரே தம்மை அவளுக்கு அறிமுகப்படுத்திக் கொண்டாரோ? அவர் எப்படி அந்தச் சதிகாரியிடம் ஏமாந்தார்? உண்மையிலேயே அவளால் ஏமாற்றப்பட்டு விட்டாரா? அல்லது ஏதேனும் ஒரு திட்டத்தோடு அவளிடம் ஏமாந்தவர்போல் நடித்துக் கொண்டிருக்கிறாரா? அந்தப் பெண் சில தினங்களுக்கு முன்னால் சளுக்கியத் தளபதியின் வஞ்சகச் சூழ்ச்சிக்கு இரையானவளாயிற்றே! மதங்கொண்ட அரிவாரணத்தின்மீது ஏற்றி விரட்டியடிக்கப்பட்டவள் அந்தப் போராபத்திலிருந்து எப்படித் தப்பினாள்? தன்னைப் பழி வாங்க நினைத்த வில்வேலிக்குச் சாதகமாகப் பல்லவ மன்னரைக் காட்டிக் கொடுப்பதால் அவளுக்கு என்ன பயன்? ஒருகால் அவளும் அவரை உண்மையாகவே காதலிக்கிறாளோ? அல்லது அவள் அவரைக் காதலிக்க வேறேதேனும் காரணம் இருக்குமோ?' — இதற்கு மேல் என்னால் சிந்திக்க முடியவில்லை.




''அண்ணே! நம்ம கடையைக் கொஞ்சம் கவனிச்சுக்கோ. அந்தப் பக்கமாப் போயி பீடி ஒரு இழுப்பு இழுத்துட்டு வந்துடறேன்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வில்வேலியின் கையில் இருந்த குறுவாள் பரமேசுவரவர்மரின் மார்பை நோக்கிப் பாய்வதற்கான இலக்கைப் பிடித்து விட்டது. அந்த ஒரு கண நேரத்தில் நான் என்ன செய்தேன் என்பது எனக்கே தெரியாது. என்னையறியாமலே என் இடையில் தொங்கிய குத்துவாளைப் பிடுங்கி வில்வேலியைக் குறி வைத்து விசிறியெறிந்துவிட்டு அங்கிருந்து விரைந்தோடி மறைந்தேன். அதன் பிறகுதான் என்னால் சற்று நிதானமாகச் சிந்திக்க முடிந்தது. அப்படிச் சிந்தித்துப் பார்த்தபோது நான் செய்த காரியம் சரியென்றே பட்டது. காரணம், சளுக்கிய விக்கிரமாதித்தனின் அகாரபலத்துக்கெல்லாம் அஸ்திவாரமாக நிற்பவன் அந்த வில்வேலிதான். அவனை வீழ்த்துவது விக்கிரமாதித்தனின் வலக்கரத்தை வெட்டிச் சாய்ப்பதுபோல் ஆகும். நெல்வேலிப் போர்க்களத்தில் விக்கிரமாதித்தன் நேரிடையாக இறங்கி நிற்கும் இந்த நேரத்தில், வில்வேலியின் துணையை இழப்பது அவனுக்குப் பேரிடி போல் ஆகிவிடும். எனவேதான் இப்படியொரு சந்தர்ப்பத்தை நெடுநாட்களாகவே நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அது இன்று சரியாக வாய்த்தது பற்றி மகிழ்ச்சியும் அடைந்தேன். ஆனால், மற்றோர் எண்ணம் எழுந்து மறுகணமே அந்த மகிழ்ச்சியை அழித்தது. ஆமாம்; வெகுதூரத்தில் நின்று நான் எறிந்த கத்தி வில்வேலியின் உயிரைப் போக்கியிருக்காது. பலத்த காயத்தையே அது உண்டு பண்ணியிருக்கும் என்று எனக்குத் தோன்றியது. அந்நிலையில் அவனைப் பார்க்கும் பரமேசுவரவர்மர் என்ன செய்வார் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். எந்தத் தனி மனி

நீசரும் வன்முறைச் செயல்களால் பறிக்க வாங்குவதை அறவே வெறுப்பவரான அவர், முன்பின் யோசியாமல் வில்லேவியின் உயிரைக் காப்பாற்ற முனைவார். அதனால் அவருக்கு மட்டுமல்லாது, எனக்கும் ஆபத்து நேரலாம். ஏனென்றால், வில்லேவியின்மீது நான் கத்தியை எறிந்து விட்டு ஓடும்போது என்னை அவன் திரும்பிப் பார்த்துக் கொண்டேதான் மரண ஓலமிட்டு மண்ணில் சாய்ந்தான். எனவே, அந்த இக்கட்டான நிலையை எப்படிச் சமாளிப்பதென்றே எனக்குப் புரியவில்லை. திரும்பி ஓடிப் போய்ப் பரமேசுவரவர்மரை எச்சரித்து அவரை அங்கிருந்து அகற்றிக் கொண்டு வந்து விடலாமா என்றும் ஓர் எண்ணம் தோன்றியது. ஆனால் என்னைப் பற்றி எல்லாரும் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்களோ, அதே கருத்தை அவரும் கொண்டிருப்பாரோ என்ற அச்சம் மேலிட அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். மேலும், தனது ஜன்மப் பகைவனின் தம்பி மகளையே காதலிக்கத் துணிந்திருக்கும் அவனுடைய மனப்போக்கு இப்போது எப்படி யெல்லாம் மாறியிருக்குமோ என்ற குழப்பம் வேறு ஏற்பட்டது. இறுதியில் ஒரு புதிய முடிவுடன் பல்லவபுரத்தை நோக்கிப் புறப்பட்டேன். அதாவது, பல்லவபுரம் அரண்மனையில் தங்கியிருக்கும் சளுக்கிய இளவரசன் விநயாதித்தனைத் தீர்த்துக் கட்டி விட்டுப் பாண்டிய நாட்டுக்கு ஓடி விட வேண்டும் என்று எண்ணினேன். சளுக்கியக் காவல் வீரர்களின் பலத்த பாதுகாப்போடு இருக்கும் விநயாதித்தனைக் கொல்வது அத்தனை எளிதல்ல என்பது எனக்கு ஏற்கனவே தெரிந்த விஷயம்தான். ஆயினும், அதற்காக ஒரு சூழ்ச்சி செய்தேன். அதாவது, பல்லவ இளவரசர் கோவிந்தவர்மர் சிறையிலிருந்து தப்பியோட உதவியவன் இலங்காரிக்குடையான்தான் என்ற உண்மையை வெளியிட்டு, அவனைப் பிடித்துத் தண்டிக்க வேண்டியது அவசியம் என்று சளுக்கிய விநயாதித்தனைத் தூண்டி, அவனை ஆலம்பாக்கத்துக்கு அழைத்துச் சென்றேன். என்னுடன் தனியாக வரும் அவனை நடுவழியிலேயே பழி தீர்த்து விடலாம் என்று எண்ணியே அவ்வாறு செய்தேன். ஆனால் அந்தக் குள்ளநரிப் பயலோ தன்னுடன் இருபது காவல் வீரர்களைத் துணைக்கு வைத்துக் கொண்டுதான் என்னோடு புறப்பட்டான். நாங்கள் போகும்போது இலங்காரிக்குடையான் தன் இல்லத்தில் இருக்க மாட்டான் என்றும், என்னுடைய மகள் இளங்கோப்பிச்சி மதுரைக்குப் போயிருப்பதால் அநந்தமதியும் அங்கு இருக்க மாட்டாள் என்றும் அனுமானித்து, அந்தத் தைரியத்திலேயே சளுக்கிய இளவரசனை ஆலம்பாக்கத்துக்கு அழைத்துச் சென்றேன். அப்படியே அவர்கள் அங்கு இருந்து விட்டாலும் என்னுடைய மகத்தான லட்சியத்துக்காக அவர்களைப் பலியிட்டு அதனால் நேரும் பழி பாவத்தை ஏற்கவும் சித்தமானேன். ஆனால்?.... எதிரிக்கு வெட்டிய குழியில் நானே தடுக்கி விழும்படி, விதி என் காலைத் தட்டி விட்டு விட்டது.''

பழையாறைச் சோமரின் கண்கள் பொலபொலவென்று கண்ணீர் உகுத்தன. உள்ளடங்கிய தொண்டையுடன் அவர் மேலும் சொன்னார்: ''என் அருமை மகள் இளங்கோப்பிச்சி மதுரை அரண்மனையில் இருப்பதாக நான் எண்ணிக் கொண்டிருக்க, அவள் அங்கிருந்து ஓடோடி எப்படியோ ஆலம்பாக்கத்துக்கு வந்து அநந்தமதியுடன் இருந்திருக்கிறாள். அந்த விவரத்தை அறியாமல் சளுக்கிய இளவரசனை அவள் இருந்த இல்லத்துக்குள் அனுப்பி விட்டு, என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றச் சாலையோரம் மறைந்து நின்று சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். கொலை வெறியுடன் உள்ளே சென்ற

இவர் இப்போதுதான் ஒரு புது ஹெர்குலிஸ் ஸைக்கிள் வாங்கியிருக்கிறார். இனி அடுத்து வரும் 25 வருடங்களில் இவருடைய அன்றாட சேவையில் ஒரு லட்சம் மைல்களுக்கும் மேலாக இவரைத் தாங்கிச் செல்லத் தயாராக இருக்கிறது இந்த ஸைக்கிள். இந்த சிரமமான பணியை அநாயாசமாய் சாதிக்கவல்லது ஹெர்குலிஸ். ஏனெனில், இந்தியாவிலேயே மிகப்பெரியதும், மிக்க நவீன இயந்திர சாதனங்களடங்கியதுமான தொழிற்சாலையில் தயாராகிறது இந்த ஸைக்கிள். அது மட்டுமல்ல. உலகிலேயே மிகப்பெரிய ஸைக்கிள் தயாரிப்பாளர்களான ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் (இங்கிலாந்து) ஸ்தாபனத்தின் தொழில் நுட்பக்கூட்டுறவுடன் தயாரிக்கப்படுகிறது. ஹெர்குலிஸ் ஸைக்கிள் சிறந்ததென மதிக்கப்படுவதில் ஆச்சரியம் ஏதுவுமில்லை!

# ஹெர்குலிஸ்

வெறும் ஸைக்கிள் மட்டுமல்ல,
வாழ்நாள் முழுதும் உழைக்கும்
ஓர் நற்றுணை

## ஒரு லக்ஷம் மைல் பிரயாணத்தைத் தொடங்கியுள்ளார் இவர்



டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா,
அம்பத்தூர், மதறாஸ்

JWT/TIC/H/2050a

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

